*Tiruppukaḻamirtam*

*Malar 3, itaḻ 2*

*May 1938*

Record no. 166









உ

ஓம் குஹாயநம:

# திருப்புகழமிர்தம்

(மாத வெளியீடு)

திருப்புகழ் தொண்டன்

கிருபானந்தவாரி

வாக்கிற்கு அருணகிரி

கருணைக்கு அருணகிரி

திருப்புகழமிர்தம் ஆபீஸ்,
108, சாபநாய்க்கன் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.

G. DARAN'S ENGRAVERS MADRAS

வருட சந்தா ரூ 1. தனிப்பிரதி அண 2.

ஓம் குஹாய நம :

## பொருளடக்கம்.

உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்.



" குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம் "

| மலர் 3 Vol. 3 | வெகுதான்ய ௵ வைகாசி ௴ மே—1938 | இதழ் 2. No. 2. |
|---|---|---|

## திருப்புகழ்.

### திருச்செந்தூர்.

(28) கொலை மத கரியன ம்ருகமத தனகிரி
கும்பத் தனமானார்
குமுதஅ முதஇதழ் பருகியு ருகிமயல்
கொண்டுற் றிடுநாயேன்
நிலையழி கவலைகள் கெடவுன தருள்விழி
நின்றுற் றிடவேதான்
நினதிரு வடிமல ரிணைமன தினிலுற
நின்பற் றடைவேனோ
சிலையென வடமலை யுடையவ ரருளிய
செஞ்சொற் சிறுபாலா
திரைகட லிடைவரு மசுரனை வதைசெய்த
செந்திற் பதிவேலா
விலைநிகர் நுதலிப மயில்குற மகளும்வி
ரும்பிப் புணர்வோனே
விருதணி மரகத மயில்வரு குமரவி
டங்கப் பெருமாளே.

### பதவுரை.

சிலைஎன வடமலை உடையவர்-வடதிசையின்கணுள்ள மகாமேரு கிரியை வில்லாகக்கொண்டருளிய சிவபெருமான், அருளிய -பேருளொடு தோற்றுவித்தருளிய, செம் சொல் சிறுபாலா-செவ்விய தமிழ் மொழிக்கிறைவாகிய இளங்குழவியே! திரைகடல் இடைவரும் - அலை

கலைவீசும் சமுத்திரத்தின் மத்தியில் மாமரமாகத் தோன்றி எதிர்த்து வந்த, அசுரனை வதை செய்த - அசுரனாகிய சூரபன்மனை சங்கரித் தருளிய, செந்தில் பதி வேலா திருச்செந்தூர் என்னும் திருப்பதியில் எழுந்தருளியுள்ள வேலாயுதக்கடவுளே! வில நிகர் நுதல் - வில்லைப் போல் வளைந்து அழகுடன் விளங்கும் புருவங்களை யுடையவர்களாகிய, இபமயில் - மயில்போன்ற தெய்வகுஞ்சரியம் மையாரையும், குறமகள் உம் - குறவர் குலத்திற்றோன்றிய வள்ளியம்மையாரையும், விரும்பி புணர்வோனே - விருப்பங்கொண்டு (அவர்கள் செய்த தவங்காரண மாகக்) கலந்து கொள்பவனே! விருது அணிமரகத மயில்வரு - வெற் றியைத் தெரிவிக்கும் கொடி, வீரகண்டாமணி இவைகளுடன் கூடிய மரகதம்போன்ற நிறத்தையுடைய மயில்வாகனத்தின்மீது எழுந்தருளி வருகின்ற, குமர - குமாரக் கடவுளே! விடங்க - அழகின் மிக்க வரே! பெருமாளே - பெருமையின் மிக்கவரே! கொலை மதகரி அ(ன்)ன - சொல்லுங்குணமுடைய மதயானையின் மஸ்தகத்திற்கு நிக ரானவையும், ம்ருகமத-கஸ்தூரியை யணிந்தவையும், தனகிரி-பொன் மலைக்கு சமமானவையும், கும்ப - கும்பத்தை யொத்தவையுமாகிய, தனமானார் - பயோதரங்களையுடைய மகளிரது, குமுத அமுத இதழ் பருகி - செவ்வாம்பல் மலரையொத்த இதழ்களிற் பெருகும் அமிர்தத் தைப் பானஞ்செய்து, உருகி-அதனால் மிகவும் உருகி, மயல் கொண்டு உற்றிடும் நாயேன் - காம மயக்கத்தைக்கொண்டு மேலும் மேலும் அவ்வாசை வழியிலேயே பொருந்தியுள்ள நாய்க்குச் சமானமாகிய அடியேன், நிலை அழி கவலைகள்கெட - அடியேனை நிலைகலங்கச் செய்யும் கவலைகள் அறவே அழிந்துபோகவும், உனது அருள்வழி நின்று உற்றிட (ஏ தான்-அசை)-தேவரீரது திருவருள் நெறியிலேயே உறுதியுடன் நின்று அச்சென்னெறியில் மேலும் மேலும் பொருந்தி யிருக்கவும், நின திருவடிமலர் இணை மனதினில் உற - தேவரீரது திருவடிமலர்கள் இரண்டும் அடியேனது மனத்தாமரையின்கண் வந்து பொருந்தி விளங்கவும், நின் பற்று அடைவேனோ - தேவரீரது பற்றை அடியேன் அடைய மாட்டேனோ?

## பொழிப்புரை.

மகாமேருகிரியை வில்லாகவுடைய சிவபெருமான் தமது பேரு ளால் தோற்றுவித்தருளிய செந்தமிழ் மொழிக்குத்தலைவராகிய இளம் பூரணரே! அலைகளையுடைய கடலின் நடுவில் மாமரமாகத் தோன்றி எதிர்த்துப் போர்புரிந்து கொண்டுவந்த சூரபன்மனை மறக்கருணையால் சங்கரித்தருளிய செந்திலம்பதியில்வாழும் வேற்படை நாயகரே! வில்லைப்போன்ற புருவங்களை யுடையவர்களாகிய மயில்போன்ற தெய்வகுஞ்சரி யம்மையாரையும் குறவர் குலத்திற்றோன்றிய வள்ளி யம்மையாரையும் அன்னார்கள் அரிதிற் செய்த தவங்காரணமாக விருப்பத்துடன் புணர்ந்து அருள்பவனே! வெற்றியின் அறிகுறிக ளாகிய விருது வீரக்கழல் முதலியவைகளையுடைய அழகிய பச்சை மயில் வாகனத்தின் மீது அடியார்பொருட்டு எழுந்தருளி வருகின்ற குமாரக்கடவுளே! கட்டழகரே! பெருமையின் மிக்கவரே! கொல் லுந் தொழிலையுடையதும் மதத்தையுடையதுமாகிய யானையின் மஸ்த கத்தையும், பொன்மலையையும், கும்பத்தையும் ஒத்து கஸ்தூரியணிந் துள்ள தனபாரங்களையுடைய மாதர்களது செவ்வாம்பலை நிகர்த்த இதழ்களின் அமிர்த ரசத்தைப் பருகி அதனால் மனமுருகி, மோகாந்த காரமாகிய மயக்கத்தையுற்று, அத்துறையிலேயே உழலும்படியான அடியேன், நிலைகுலையச்செய்யும் கவலைகள் நீங்கவும், தேவரீரது திரு வருட் சென்னெறியில் உறுதியுடன் நின்று அவ்வழியலேயே பொருந்தியிருக்கவும், தேவரீரது அருணசரணாரவிந்தங்களிரண்டும் அடியேனது மனதில்வந்து சேரவும் தேவரீரது பற்றை (அடியேன்) அடையமாட்டேனோ?

## விரிவுரை.

கொலைமதகரி :—

தனத்திற்கு யானையின் மஸ்தகத்தை நிகரென்று கூறவந்த நம் பரமாசிரியர் "கொலைமதகரி" என்று குறிப்பிட்டுளதை ஊன்றி நோக்குக. யானை எவ்வாறு கொல்லுந் தொழிலையுடையதோ அவ் வாறு மானார் நட்பும் நமது அறிவையும் ஆக்கத்தையும் ஆயுளையும் ஏனைய நலன்களையும் கொல்லுந்தன்மையுடையதாம். யானை எவ்வாறு மதங்கொண்டு வரம்புமீறித் திரியுமோ அவ்வாறே அவ்விலைமகளிரும் நாணம் முதலியன இன்றி வரம்புகடந்து திரிவர். மதங்கொண்ட யானையை அறிவுடையவர்கள் அங்குசத்தால் அடக்குவதுபோல் மகளிரது விழைவையும் வைராக்கியம் என்னும் அங்குசத்தால் அறி வுடையார் அடக்கக்கடவர்.

வனமுலை சயிலமல கோலையமனேன......
.........உணர்வோடு புணர்வதும் ஒருநாளே
—திருப்புகழ்.

கும்பத்தனம் :—

தலைகீழாகக் கவிழ்க்கப்பட்டுள்ள கும்பமே தனத்திற்கு உவமையாதலால், அக்கும்பத்தைப்போல் தனமும், மனிதர்களைத் தலைகீழாக நாகம் முதலிய துன்பத்தில் கவிழ்க்கும் தன்மையுடைத்து.

அமுத இதழ்பருகி உருகி :—

மகளிரது அதராமிர்தத்தை நாடோறும் பருகி அதனால் மிகவும் உருகிக் கெடுகின்றனர்.

" அருவமிடையென வருபவர் துவரிதழ்
அமுது பருகியு முருகியும் "

—திருப்புகழ்.

நிலையழிகவலை.......மனதினிலுற—

மேற்கூறிய அற்ப சுகமாகிய மின்னல் வாழ்வைப் பெரிதென எண்ணி மயங்கி, அறிவுகுன்றி, மனம்விழைந்தவாறு கங்குல்பகலாக அலைந்து, கவலைக்காளாகின்றனர். அக்கவலைகள் அறவே நீங்குதற்கு வழி இறைவன் பற்றையடைவதாம். அப்பற்றின் முதிர்ச்சி இறைவனது திருவருள் நெறியில் அசைவற்று நிற்பதாம். அவ்வாறு நின்றவர் மனத்தில் இறைவனது திருவடித்தாமரை மலரும்; ஆதலால் இறைவன்பற்றை யடைந்தோர்க்குத் துன்பநீக்கமும், அதனால் இன்ப ஆக்கமும், திருவருணெறியின்றிறமும், இறைவன் திருவடிப்பேறும் முறையே உண்டாகுமென்பது தேற்றம்.

நின்பற்று அடைவேனோ: —

மேற்காட்டிய ஞாயப்படி இறைவன்பற்றை யடைந்தவர்க்கு ஏனைய பற்றுக்கள் தூங்கியோன் கைப்பொருள்போல் தாமே நீங்கும். இதனைப் பொய்யிற் புலவரும் கூறுமாறு காண்க.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

இறைவன் பற்றைப்பற்றி பற்றுவிட்டு அவன் அருணசரணாரவிந்தங்களைத் தம்மனத்தில் வைக்கப்பெற்றோர்க்கு அணுத்துணையேனும் கவலைகள் வாரா; இறைவன் திருவடியைச் சாராதவர்க்கு ஒருபோதும் மனக்கவலையை மாற்றமுடியாது.

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது

—திருக்குறள்.



ஏனைய பற்றுக்களைவிட்டு எம்பிரானுடைய திருவடிபற்றப் பெறுநாள் என்றோ அன்றுதான் நாம் பிறந்தவராவோம்; அப்பொழுது தான் பிறவாத தன்மையும் பெறுவோம்.

" மற்றுப் பற்றெனக் கின்றிநின்றிருப் பாதமே மனம் பாவித்தேன்
பெற்றலும் பிறந் தேனினிப் பிறவாததன்மைவந் தெய்தினேன்"

—சுந்தரர் தமிழ்மறை.

" உன்பற்றேழிய ஒருபற்றுமில்லை யுடையவனே "

—திருவெண்காடர்.

செஞ்சொல்:—

" செஞ்சொல் " என்பதற்குப் பிரணவமொழியென்று பொருள் கொள்வாருமுளர்; " செஞ்சொன் மாதிசை வடதிசை குடதிசை விஞ்சு கீழ்திசை " என்று நம் அருணகிரிநாதரே பிறிதோரிடத்தில் தென்திசையைக் குறிக்கவந்தபோது தமிழ்மொழியையுடைய திசை என்பதற்கு " செஞ்சொல்மாதிசை " என்று கூறியுள்ளாராதலால் "செஞ்சொல்" என்பதற்கு தமிழ்மொழி என்பதே ஆசிரியர்கருத்தாகும். மொழிகளிலே தமிழ்மொழியே இனிய சொற்களையுடைத்தென்பதும் போதரும்,

சிறுபாலா:—

விநாயகமூர்த்திக்கு இளையோன் என்பதையும், என்றும் இளையோனாக இருப்போன் என்பதையும் உணர்த்துகின்றார்.

" என்றும் இளையாய் அழகியாய் " —நக்கீரர்.

" என்று மகலாத இளமைக்காரா "

—அருணகிரிநாதர்.

திரைகடலிடை வரு மசுரன் :—

சமுத்திரத்திற்கு மத்தியில் மாமரமாகத்தோன்றி ஆயிரத்தெட்டண்டங்களும் நிழல்படுமாறு, இரும்பின் மயமான இலைகளையுடைய கிளைகளை அசைப்பதால் உயிர்களுக்குப் பெருந்துன்பத்தை விளைத்த சூரபன்மன்.

இபமயில் குறமக.........விரும்பிப் புணர்வோனே:—

தெய்வயானையாகிய கிரியாசக்தியையும், வள்ளியம்மையாராகிய இச்சாசக்தியையும், ஆன்மாக்களுக்கு அருள்செய்யும்பொருட்டு இறைவன் விரும்பிச் சேர்கின்றனன்.

விருதணி மரகதமயில்:—

எம்பெருமான் எழுந்தருளிவரும் பச்சைப்ரவாளமயில், தரகசுஜ ரதகடக விகடதட நிருதர்குல துஷ்டநிஷ்டூரமுடையதும் நெடியமுது ககனமுக டுறவீசி நிமிருமொரு நீலக்கலாபமுடையதும், படர்சக்ர வாளகிரி துகள்பட வையாளி வருந்திறமுடையதுமாகத் திகழ்வதால் விருதுகளையணிந்து வெற்றியைத் தெரிவித்துக்கொண்டுவருகின்றது.

குமரவிடங்க —

திருச்செந்தூரிலுள்ள உத்சவமூர்த்திக்குக் 'குமர விடங்கர்' என்று திருநாமம்' விடங்கர் - உளிபடாமூர்த்தி என்றும் பொருள்.

## கருத்துரை.

மலைவில்லாரருளிய செந்தமிழ்க்குமாரரே ! சூரபன்மனை வதைத் தருளிய செந்திலாதிபரே ! வல்லீதேவசேனாகாந்தரே ! மரகதமயில் மிசைவரும் குமரவிடங்கப்பெருமாளே ! விலைமகளிரது மயக்கத்தை யுடைய அடியேன் கவலைகள் நீங்கவும், திருவருள்நெறியில் நிற்கவும் தேவரீரது திருவடி எனது மனதின்கண்பொருந்தவும் தேவரீருடைய பற்றை அடையமாட்டேனோ ?

## திருப்புகழ்.

(29) இயலிசையி லுசித வஞ்சிக் — கயர்வாகி
இரவுபகல் மனது சிந்தித் — துழலாதே
உயர்கருணை புரியு மின்பக் — கடல்மூழ்கி
உனையெனது ளறியு மன்பைத் — தருவாயே
மயில்தகர்க லிடைய ரந்தத் — தினைகாவல்
வனசகுற மகளை வந்தித் — தணைவோனே
கயிலைமலை யனைய செந்திற் — பதிவாழ்வே
கரிமுகவ னிளைய கந்தப் — பெருமாளே,

## பதவுரை.

மயில் தகர் கல் இடையர் - மயிலும் ஆடும் நிறைந்த குன்றி னிடத்தே வசிக்கும் வேடுவர்களது, அந்த தினைகாவல் - அழகிய தினைப்புனத்தைக் காவல் புரிந்த, வனச குறமகளை - தாமரைமலரை யொத்த திருமுகத்தையுடைய வள்ளிநாயகியை, வந்தித்து - வணங்கி, அணைவோனே — அவ்வின்ப சத்தியுடன் கலப்பவரே ! கயிலைமலை அனைய - திருக்கைலாய மலைக்கு நிகரான மகிமை பொருந்திய, செந் தில் பதி வாழ்வே - திருச்செந்தூர் என்னுந் திருத்தலத்தில் வாழ் பவரே ! கரிமுகவன் இளையகந்த - யானைமுகமுடைய விநாயக மூர்த்திக்குத் தம்பியாகத் திருவவதாரஞ் செய்தருளிய கந்தப் பெரு மானே ! பெருமாளே - பெருமையின்மிக்கவரே ! இயல் இசையில் உசித - உடற்சாயலிலும் இசைப்பயிற்சியிலும் மேன்மைபெற்றுள்ள, வஞ்சிக்கு அயர்வு ஆகி-கொடிபோன்ற இடையுடை பெண்ணின் பால் மயக்கத்தையடைந்து, இரவு பகல் மனது சிந்தித்து - இரவும் பகலு மாக அப்பெண்ணைசையிலேயே மூழ்கி அதனையே மனம் நினைத்து நினைத்து, உழலாதே - சுழற்சியை யடையாமற்படிக்கு, உயர் கருணை புரியும் - தேவரீரது சிறந்த கருணைப்ரவாக வெள்ளத்தால் உதிக்கச் செய்யும், இன்பக்கடல் மூழ்கி - பேரின்ப சமுத்திரத்தில் (பவப் பிணி யின் வெப்பம் நீங்க) மூழ்கி, உனை எனதுள் அறியும் - தேவரீரது சித்சொரூபத்தை அடியேனுடை அகக்கண்ணில் அந்தர்முகமாக அறிவால் உணரும், அன்பை தருவாயே - மெய்யன்பை அடியே னுக்குத் தந்தருள்வீர்.

## பொழிப்புரை.

மயிலும் ஆடும் நிறைந்த மலையினிடத்தேவாழும் வேடுவர்களது, அழகிய தினைவனத்தைக் காவல்புரிந்து கொண்டிருந்த தாமரை யனைய திருமுகமுடைய வள்ளியம்மையாரைப் பணிந்து, திருக் கல் யாணஞ் செய்துகொண்டருளியவரே ! (உள்ளுவார் வினையகற்றும் வெள்ளியம் பொருப்பாகிய) திருக்கைலாய மலையை யொத்த மகிமை யுடைய திருச்செந்திலம்பதியில் வாழ்பவரே ! யானைமுகத்தையுடைய விநாயகப் பெருமானது இளைய சகோதரரே கந்த மூர்த்தியே ! பெருமையிற் சிறந்தவரே ! உடம்பின்சாயலினாலும் இசைப்பாடல் களைப்பாடுவதனாலும் சிறந்த கொடி போன்ற இடையுடைய பெண் ணின்மீது வேட்கையுற்று அதனால் மயக்கத்தையும் மயக்கத்தால் வருத்தத்தையும் அடைந்து, இரவு பகலாக அவ்விடய சுகங்களையே எண்ணிஎண்ணி, சுழன்று சுழன்று திரியாமற்படிக்கு, தேவரீரது பரம கருணைப்ரவாக வெள்ளத்தால் உண்டாகும் பேரின்பக்கடலில் (பிறவிவெப்பம் நீங்க) மூழுகி தேவரீரது அறிவுவடிவத்தை என் அறிவுக்கண்ணால் உள்முகத்தில்கண்டு தெரிசிக்கும் அன்பை அடியே னுக்குத் தந்தருள்வீர்.

## விரிவுரை.

இன்பக்கடல் மூழ்கி :—

இறைவனது திருவருளால் எய்தும் ஆனந்த வெள்ளத்தில் அழுந்தியிருப்பதே பெரிய சுகமாம். அதுவே முத்தியாம்.

" ஆனந்த வெள்ளத் தழுந்துவது முத்தியெனில்
வானங்கள் பெய்யு மழை"

" பத்தித் துறையிழிந்து ஆனந்தவாரி படிவதனல்
புத்தித் தரங்கந் தெளிவதன்றே"

உனை எனது ளறியும்:

இறைவனை வெளிமுகத்தில் காணுது உள்முகத்தில் அறிவால் அறிதல்வேண்டும். அறிவும் அறியாமையுங்கடந்த அறிவே திருமேனியாகக்கொண்ட ஆண்டவனை அறிவுக்கண்ணுலேயே காணமுடியும்.

" அறிவா லறிந்து னிருதா ளிறைஞ்சும்
அடியா ரிடைஞ்சல் களைவோனே."

"அறிவினிற் சென்று செருகுந் தடந்தெளிதர
. . . . . . என்றுநின் தெரிசனைப் படுவேனே"

—திருப்புகழ்

தினைகாவல் :—

ஜீவான்மாவாகிய வள்ளிநாயகியார் ஐம்புலன்களாகிய வேடுவர் குலத்தில் தோன்றி, நெஞ்சமாகிய புனத்தில் ஞானப்பயிராகிய தினையை, மாயாமலமாகிய பறவைகள் அழிக்காவண்ணம் காத்துக் கொண்டிருக்க, அடியார்க்கு எளியவராகிய எந்தை கந்தவேள் விரைந்துவந்து, தன்னையுணாராத வள்ளியை, "உன்னைக் கும்பிடுகிறேன் என்னை மணந்துகொள்" என்று இதவசனங்கூறி ஆட்கொண்டனர்.

கயிலைமலையனைய செந்தில்:—

திருச்செந்தூரில் முருகவேள் தாம் சூராதியவுணரை மாய்ப்பதற்கு முன்னும் பின்னும் தங்கியிருந்து பக்தாபீஷ்ட வரதரா எழுந்தருளியிருப்பதால் திருக்கைலாய மலைக்கு நிகரானது என்றார்.

## கருத்துரை.

குறமகள் நாயக! செந்தில் வாழ் கந்தவேளே! கணேசமூர்த்தியின் இளையவரே! பெண்ணாசையிற் சிக்கி யடியேன் உழலாமற் படிக்கு தேவரீரது திருவருளால் பெருகும் பேரின்பவாரிதியில்முழுகி தேவரீரை அடியேன் உள்முகத்தால் தெரிசிக்கும் மெய்யன்பை யருள்வீர்.

---

உ

ஓம் ஸுப்ரஹ்மண்யாய நம:

# ॥ शिवानन्दलहरी ॥

## சிவானந்த லஹரீ

(ஆதிசங்கரர் அருளிச் செய்தது)

(11-வது பக்கத் தொடர்ச்சி)

## நான்முகம்

सहस्रं वर्तन्ते जगति विबुधाः क्षुद्रफलदा
न मन्ये स्वप्ने वा तदनुसरणं तत्कृतफलम् ।
हरिब्रह्मादीनामपि निकटभाजामसुलभं
चिरं याचे शंभो शिव तव पदाम्भोजभजनम् ॥ ४ ॥

(4) ஸஹஸ்ரம் வர்தந்தே ஜகதி வி[3]பு[4]தா: க்ஷு[3]த்[2]ரபல[3]தா
ந மன்யே ஸ்வப்னே வா தத[3]னு ஸரணம் தத்க்ருத[2]பலம்
ஹரிப்[3]ராஹ்மா[3]தீ நாமபி நிகடபா[4]ஜாமஸு[4]லபம்
சிரம் யாசே சம்போ தவ ப[3]தா[4]ம்போஜப[4]ஜனம் ॥

## பதவுரை.

| | |
|---|---|
| ஜகதி | - உலகத்தில், |
| க்ஷுத்ரபலதா: | - அற்ப பலன்களைத் தருகின்ற, |
| விபுதா: | - தேவர்கள், |
| ஸஹஸ்ரம் | - ஆயிரக்கணக்காக, |
| வர்தந்தே | - இருக்கின்றார்கள், |
| ஸ்வப்னேவா | - கனவிலுங்கூட, |
| ததனுஸரணம் | - அந்தத்தேவர்களை ஆச்ரயத்தலையும், |
| தத்க்ருதபலம் | - அந்தத் தேவர்களால் செய்யப்படுகின்ற பிரயோஜனத்தையும், |
| நமன்யே | - எண்ணுகின்றேனில்லை, |

| | |
|---|---|
| சம்போ | - சுககாரணனே ! |
| சிவ | - மங்கலவடிவினனே ! |
| நிகடபாஜாம் | - சமீபத்தை அடைந்தவர்களான, |
| ஹரிபிரமாதி நாமபி | - திருமால், பிரமன் முதலானவர்களுக்குங்கூட, |
| அஸுலபம் | - கிடைக்காத, |
| தவ | - தேவரீருடைய, |
| பதாம்போஜபஜனம் | - தாமரைமலர்போன்ற திருவடிகளின் சேவையை, |
| சிரம் | - வெகு காலமாய், |
| யாசே | - யாசிக்கின்றேன். |

## பொழிப்புரை.

ஓ சம்புவே ! உலகத்தில் அற்ப பலன்களை (சுவர்க்காதிமுதலியன) கொடுக்கின்ற தேவதைகள் ஆயிரக்கணக்காயுளர். அவர்களை வழிபட்டு அவர்கள் தரும் பயனையடைய அடியேன் கனவிலும் நினையேன். நாரணன் நான்முகன் முதலியவர்களுக்கும் அடைதற்கரிய தேவரீரது பாதாரவிந்த சேவையை வெகுகாலமாய் யாசிக்கின்றேன். இதனால் சிவோத்க்ருஷ்டத்தையும், மீட்டிங்குவாரா நெறியாகிய சிவகதியை யருளவல்லவர் சிவபெருமான் ஒருவரே என்பதையும் வலியுறுத்தப்பட்டது.

கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளே னினதடி யாரொடல் லானர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே யிருக்கப் பெறினிறைவா
உள்ளேன் பிறதெய்வ முன்னையல்லா தெங்க ளுத்தமனே.

—மாணிக்கவாசகர்.

स्मृतौ शास्त्रे वैद्ये शकुनकविता गानफणितौ
पुराणे मन्त्रे वा स्तुतिनटनहास्येष्वचतुरः ।
कथं राज्ञां प्रीतिर्भवति मयि कोऽहं पशुपते
पशुं मां सर्वज्ञ प्रथित कृपया पालय विभो ॥ ५ ॥

(5) ஸ்ம்ருதௌ சாஸ்த்ரே வைத்யே சகுன கவிதாகானபணிதௌ
புராணே மந்த்ரே வா ஸ்துதிநடன ஹாஸ்யேஷ்வசதுர:
கதம் ராஜ்ஞாம் ப்ரீதிர்பவதி மயிகோSஹம் பசுபதே
பசும் மாம் ஸர்வஜ்ஞ ப்ரதித க்ருபயா பாலய விபோ ||



## பதவுரை.

| | |
|---|---|
| ஸ்ம்ருதௌ | - மனு முதலியவர்களால் செய்யப்பட்ட தரும சாஸ்திரத்திலாவது, |
| சாஸ்த்ரே | - வியாகர்ணம், தர்க்கம் முதலிய சாஸ்திரத்திலாவது, |
| வைத்யே | - தன்வந்த்ரி முதலியவர்களால் செய்யப்பட்ட வைத்திய நூல்களிலாவது, |
| சகுன கவிதா கான பணிதௌ | - சகுன சாஸ்திரம், கவிபாடுதல், சங்கீதம் பாடுதல் இவைகளிலாவது, |
| புராணே | - புராணங்களிலாவது, |
| மந்த்ரேவா | - மந்திர சாஸ்திரத்திலாவது, |
| ஸ்துதி நடன ஹாஸ்யேஷு | - துதித்தல், நாட்டியம், பிறரை நகைக்கும்படி செய்தல் இவைகளிலாவது, |
| அசதுர: | - அடியேன் சாமர்த்தியமற்றவன், |
| ராஜ்ஞா: | - அரசர்களுக்கு, |
| ப்ரீதி: | - அன்பானது, |
| மயி | - என்னிடத்தில், |
| கதம் | - எவ்விதமாய், |
| பவதி | - உண்டாகிறது, |
| பசுபதே | - சர்வேச்வரனே ! |
| ஸர்வஜ்ஞ | - எல்லாமறிந்தவனே ! |
| ப்ரதித | - பிரசித்தி பெற்றவனே ! |
| விபோ | - எங்கும் நிறைந்தவனே ! |
| பசும் | - பசுவாயும், |
| அஹம் கம் | - நான் யார் ? (என்பதை அறியாதவனுயிருக்கின்ற), |
| மாம் | - அடியேனை, |
| க்ருபயா | - கருணையினால், |
| பாலய | - காப்பாற்று. |

## பொழிப்புரை.

ஸ்ம்ருதி, சாஸ்திரம், வைத்தியம், சகுனம், கவித்துவம், சங்கீதம், புராணம், மந்திரம், துதி, நடனம், ஹாஸ்யம் ஆகிய இவற்றில் தேர்ச்சியில்லாமையால் அரசர்களுக்கு அடியேனிடத்தில் அன்பு உண்டாகுமோ ? (உண்டாகாது). ஆதலின் ஓ பசுபதே ! தேவரீரே அடியேனைக் காத்தருளவேண்டும்.

घटो वा मृत्पिण्डोऽप्यणुरपि च धूमोऽग्निरचलः
पटो वा तन्तुर्वा परिहरति किं घोरशमनम् ।
वृथा कण्ठक्षोभं वहसि तरसा तर्कवचसा
पदाम्भोजं शंभोर्भज परमसौख्यं व्रज सुधीः ॥ ६ ॥

(6) கடோ வா ம்ருத்பிண்டோமப்யணுரபி ச தூமோமக்னிரசல:
படோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கோர சமனம் |
வ்ருதா கண்டக்ஷோபம் வஹஸி தரஸா தர்க்கவசஸா
பதாம்போஜம் சம்போர்பஜ பரமஸௌக்யம் வ்ரஜ ஸுதீ:

## பதவுரை.

| | |
|---|---|
| ஸுதி | - நல்ல புத்தியையுடையவனே ! |
| கடோவா | - குடமாவது, |
| ம்ருத் பிண்டோபி | - மண்கட்டியாவது, |
| அணுரபிச | - பரமாணுவாவது, |
| தூம: | - புகையாவது |
| அக்னி: | - நெருப்பாவது |
| அசல: | - பருவதமாவது, |
| படோவா | - துணியாவது, |
| தந்துவா | - நூலாவது; |
| கோர சமநம் | - பயத்தைச் செய்கிற யமனே, |
| பரிஹரதிகிம் | - தடுக்க வல்லவோ ? என்னே ? |
| தர்க்கவசஸா | - தர்க்க சாஸ்திரத்தில் சொல்லியவார்த்தையினல், |
| வ்ருதா | - வீணாய், |
| கண்டோ க்ஷோபம் | - தொண்டையினுடைய சிரமத்தை, |
| வஹஸி | - வகிக்கின்றாய், |
| சம்போ: | - சுகத்தைத் தருகின்ற பரமசிவனுடைய, |
| பதாம்போஜம் | - தாமரை மலரையொத்த திருவடியை, |
| பஜ | - தியானஞ்செய், |
| தரஸா | - சீக்கிரமாக, |
| பரம சௌக்யம்: | - மேலான சுகத்தை (மோக்ஷத்தை), |
| வ்ருஜ | - அடைவாயாக. |

## பொழிப்புரை.

நல்ல புத்தியை யுடையவனே ! குடம், மண், அணு, புகை அக்கினி, மலை, துணி, நூல் முதலியனவாகத் தருக்கநூலில் வியவகரிக்கப்பட்டவைகளால் கொடிய யமனை வெல்ல முடியுமோ ? தருக்க நூல்களால் ஏன் வீணாக நெஞ்சை வற்றச்செய்கிறாய் ? சிவபெருமானது திருவடித்தாமரைகளைப் பாடி சீக்கிரம் மோக்ஷ சாம்ராஜ்யத்தை யடைவாயாக.

(தொடரும்).

---

உ

ஓம் குஹாய நம:

# கந்தர் திருவிளையாடல்

(15வது பக்கத் தொடர்ச்சி)

வேதமுடிவில் விளங்கும் மெய்ப்பொருளாய், ஆக்கல் அளித்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழிற்கும் அதிபராய், மூவர் முதல்வராய், ஆன்மாக்களுடைய தகாராகாச புண்டரீகவீட்டில் ஓவாது ஆனந்தத்தாண்டவம் புரியும் பரம்பொருளாய் விளங்கும் ஆறுமுகக்கடவுள், இவ்வாறு அளவில்லாதகாலம் அயனைச்சிறை புரிந்து தாமே சிருட்டியாதி தொழில்களைப் புரிந்து கொண்டிருப்ப, திருமகள் கொழுநராந்திருமால் பிரமதேவரது சிறை நீக்குவிக்கக் கருதி, தேவர்களையும் முனிவர்களையும் தம்மிடத்து வரும் வண்ணம் நினைந்தார். அதனையறிந்து ஆதித்தர்களும், மருத்துவர்களும், வசுக்களும், சத்தமாதர்களும், விஞ்சையர்களும், கருடர்களும், இயக்கர்களும், திக்குப்பாலர்களும், சந்திரனும், ஏனைய கிரகங்களும், நக்ஷத்திரங்களும், பொதியாசலத்தில் வாழுகின்ற அகத்தியர் முதலிய முனிவர்களும், பிரமரொன்பதின்மரும், ஆதிசேடனும், நாகர்களும் வந்து திருமாலை வணங்கி நின்றார்கள்.

திருமால் அவர்களோடு சென்று, வெள்ளியம் பொருப்பை யடைந்து, முதற் கோபுரவாயிலில் இருக்கும் திருநந்தி தேவர்பால் விடைபெற்று, செம்பொற் கோயிலுக்குட் சென்று, தமக்குத்தாமே நிகராகிய சிவபெருமானுடைய திருவடியை வணங்கி, மறைமுறை துதித்து நின்றார். கண்ணுதற்கடவுள் அவர்கள் மீது திருவருள் நோக்கஞ்செய்து, நீங்கள் "என்றும் இல்லதோர் துன்பத்தோடு இன்று நம்பால் வந்த காரணம் யாது ?" என்று வினவியருளினர். அது கேட்ட வாசுதேவமூர்த்தி வாய்புதைத்து நின்று, "எப்பொருட்கும் இறைவரே ! தேவரீருடைய திருக்குமாராகிய சுப்பிரமணியக்கடவுள் இங்குவந்த பிரமதேவனைப் பிரணவத்திற்குப் பொருள் கேட்டு, அவன் அஃதறியாது மயங்கலும், அவனைக் குட்டிச் சிறையிடைவைத்து, அவனது படைப்புத் தொழிலையுஞ் செய்கின்றார். ஏழைபங்காள ! எவ்வுயிர்களுக்கும் தாமே பரமபிதாவாதலால் முருகக்

கடவுளைப் போல் பிரமனும் உமக்கு மைந்தனேயாகும். எமது துன்பத்தை நீக்கி இன்பத்தை வழங்கும் பொருட்டுத் திருவவதாரம் புரிந்த முழுமுதற் கடவுளாகிய முருகப்பெருமானை இளையோன் என்று தனது பேதைமையால் அவரைவணங்காது சென்ற அப்பிரமன், அதன்பயனைக அளப்பில்காலம் சிறைப்பட்டு மனம் நொந்து வாடித் துன்பவாரிதியில் மூழ்கியிருக்கின்றான். எம்பெருமானே! அவன் சிறையை நீக்கித் திருவருள்புரிய வேண்டும்" என்றும் விண்ணப்பஞ் செய்து நின்றார்.

சிவ பெருமான் புன் முறுவல் கொண்டு "தேவர்களே! என்னையுங் குமாரமூர்த்தியையும் பிரித்துணர்வோர்கள் ஒருபோதும் இன்பமடையார்கள், சிவம் வேறு குமரன் வேறு என்று மடவோர்தாம் பின்னம் பேசுவார்கள்,

யச்ச மஹேச்வர:! யச்சஸ்கந்த!

என்று பஞ்ச ருத்திரங்களுள் ஒன்றாய் அதர்வசிரசு என்னுஞ் சாகையால் உணர்த்தப்படுகின்றதன்றோ? குமாரமூர்த்தியை வேறாகக் கருதி நம்மை மட்டும் வழிபாடு செய்தார்களுக்குக் கரைகாணாத் துன்பமே உண்டாகும்; ஐயமின்று இவ்வுண்மையை யறியாத பிரமன் நல்லுணர்ச்சியடைந்து உய்தற்பொருட்டே நங்குமாரன் அவனைத் தண்டித்துச் சிறையிடுவித்தான். தன்னைவணங்கிலனென்ற வெகுளியாலன்று;

ஈசா நஸ்ஸர்வவித்யாநா மீச்வரஸ்ஸர்வபூதாநாம்
ப்ரஹ்மாதிபதிர் ப்ரஹ்மணோதிபதிர் ப்ரஹ்மா சிவோமே அஸ்து ஸதாசிவோம்.

என்று எம்மை வேதம் ஒரு முறையே பிரணவசத்தத்தால் அழைக்கின்றது; நங்குமாரக்கடவுளை "சுப்ரஹ்மண்யோம்! சுப்ரஹ்மண்யோம்!! சுப்ரஹ்மண்யோம்!!! என்று மூன்றுமுறைகூவி அழையாநிற்கும் இக்கருத்துக்களை யறியாது தருக்கிப் போந்த பிரமனைச் சிறைநீக்கு விப்பது எவ்வாறு?

எக்கலைக்கும் பூதங்க ளெவற்றினுக்கும் பிரமனுக்கு மீசனென்னத்
தக்கமறைதற் பரப்பிரமஞ் சதாசிவனே மெனவேதஞ் சாற்று மல்லால்
முக்கனல்சூழ் வேள்வியிற் சுப்பிரமணிய னேமெனவு முக்காற்கூறுந்
இக்கருத்தை யறியானை யெவ்வாறு விடுவிப்பா தியம்புமின்னே.

என்று கூறி யருளினர். அது கேட்ட திருமால் அஞ்சி, 'எந்தையே! பரமகருணா நிதியாகிய தேவரீர் பிரமன் அறியாமையைப் பொறுத்



தருள வேண்டு "மென்ற பற்பல கூறிதுதிக்க, தயாசமுத்திரமாகிய சிவபெருமான் திருவுளமிரங்கி சிலாதனருடைய தவத்தால் அவதரித்த திருநந்தி தேவரைநோக்கி, "நம்முடைய மைந்தனுங் கந்தவேள் நான்முகனைச் சிறையிடுவித்தான் என்கின்றனர்; நீ குமாரசுவாமியின் பாங்கரேகி, நமது வாசகத்தைக்கூறி,பிரமனைச்சிறைவிடுவித்து, இங்கு மீளக்கடவாய்" என்று பணித்தருளினர். நந்திதேவர் அச்சிவாக்கை யைச் சிரமேற்றாங்கி, புரமெரித்த புராதனனை வணங்கி விடைபெற்று அளப்பில் கணங்கள் சூழப்போய் கந்தவெற்பையடைந்து, செம் பொற்கோயிலிற்புகுந்து, அரியணைமேல் வீற்றிருக்கும் அறுமுக வள்ளலது அருணசரணாரவிந்தங்களை முறைப்படி வணங்கி எழுந்து, வேதமுதல்வா! விமலன் புதல்வா! தயாசாகரா! ஞான திவாகரா! அஷ்டாதச விலோசன! பாவவிமோசன!" என்று துதித்து வாய் புதைத்துக் காமலர் குவித்து நின்றார். எந்தை கந்தவேள் திருநோக்கஞ்செய்தருளி "நீ ஈண்டுவந்த காரணம்யாது?" என்ன, நந்திதேவர் "எம்பெருமானே! பிரமனைச் சிறை நீக்கும்பொருட்டு உமக்குச் சொல்லும்வண்ணம் புரிசடைக்கடவுள் அடியேனை இங்கு விடுத்தருளினர்; அவனைத் தடையின்றிச் சிறைநீக்கியருளுவீர்; குடிலமந்திரத்தின் பொருள் அவன் சொல்லுதற்கு எளியதோ" என்று சொன்னார். அவ்வாறு சொல்லுமுன் அறுமுகக்கடவுள் சினந்து, அன்ன வாகனனைச் சிறை நீக்கேன்; இங்கு நீ நிற்பையாயின் நின்னையுஞ் சிறை யிடுவிப்பேன்; விரைந்துபோய்விடு" என்று திருவாய்மலர்ந்தருளினர். திருநந்திதேவர் வேறொன்றும் விளம்பாது அஞ்சி நடு நடுங்கி, முருகக்கடவுளை வணங்கிக்கொண்டு, மீண்டு திருக்கயிலையை யடைந்து கறைமிடற்றண்ணல் திருமுன்சென்று, வணங்கிநின்று, ஆறுமாமுகத்தண்ணல் திருவாய்மலர்ந்தருளிய வாசகத்தை விண்ணப்பஞ்செய்தார்.

மதிநதியணிந்த மணிகண்டப்பெருமான் திருநகைசெய்து சிங்காசனத்தினின்றும் விரைந்தெழுந்து, அழகிய தமது ஆலயத்தை நீங்கி, இடபவாகனமீது ஏறியருளினர். துழாய்முடியோனும், ஏனைய தேவர்களும், அருந்தவ முனிவரும் துதித்துக்கொண்டு எம்பெருமான் பின்னே சென்றார்கள். படைகளைத்தாங்கிய பூதகணங்கள்தொழுது கொண்டு பக்கத்தே சென்றார்கள். மாதிருக்கும் பாதியர் இவ்வாறு இடபமூர்ந்து வெள்ளிமால்வரையை நீங்கி, செந்திருமுனிவரும் அந்தரர்•அனைவரும் ஒழியாது வந்தனை புரிந்துகொண்டு நிற்கும் கந்த

வெற்பையடைந்து, முருகக்கடவுள் திருவாலயத்திற்குமுன் சென்ற வுடனே இடபத்தினின்றும் இறங்கி, உள்ளே புகுந்தருளினர். அது க்ண்டவுடனே குமாரக்கடவுள் "எந்தையார் வந்தருளினர்" என்று இருக்கைவிட்டெழுந்து, எதிர்கொண்டு வணங்கி, அழைத்துக்கொண்டு போய், தமது திவ்ய சிங்காசனத்தின்மீது எழுந்தருளச்செய்து, "உயிர்க்குயிராகிய எம்பெருமானே! நீர் இங்கு எழுந்தருளிவந்த கருமம் யாது?" என்று வினவினர். சிவபெருமான் தமது திருக் குமாரருடைய இனிய மொழிகளைக் கேட்டு பேருவகைகொண்டு "குழந்தாய்! நீ பிரமனைச் சிறை புரிவித்தனை; நாம் அதனை நீக்கக் கருதிவந்தேம்; அவனைச் சிறைவிடக்கடவாய்" என்று திருவாய் மலர்ந்தருளினர். பிறைமுடிப்பெருமானுடைய இன்சொல்லைக்கேட்ட மறைமுடிப்பொருளாகிய இளம்பூரணர், தமது திருமுடியையசைத்து "எந்தையே, முதலக்கரமாகிய ஓரெழுத்தின் பொருளை அறியாதவன் உலகத்தைப்படைப்பன் என்பது பேதைமையே; அவன் வேதங்கள் வல்லவனென்பதும் அதுபோலும். ஐயனே! தமது திருவருள் அழகிது; அழகிது. வேதத்தின் முன்னின்ற குடிலமந்திரத்தின் பொருளை அறியமாட்டாதவன் உமக்குப் பூசைசெய்யவும், நீர் படைத்தற்றொழிலாகிய பாரத்தை அவன்மீது சுமத்தினீர். உலகங்களைப் படைக்குந் தொழிலைப்பெற்றமையால் பிரமன் தருக்குற்று யாவரையுஞ் சிறிதாயினும் மதிக்கின்றிலன். உம்மை அவன் வழிபடினும் அகந்தை சிறிதும் நீங்கினானில்லை; ஆதலால் அவனைச் சிறை நீக்கேன்" என்றார்.

பெருங்கருணாநிதியாகிய பிறைமுடிப்பெருமான், "மைந்த! நின் செய்கை என்னை? நமது ஆணையின்படி நந்திவந்து கூறியும் நீ கேட்டிலை; நான்முகனைச் சிறைவிடுமாறு நாமேவந்து கூறியும் கேட்கின்றிலை; மறுத்துரைக்கின்றனை" என்று சிறிது முனிவார்போல் மொழிந்தருளினர். முருகக்கடவுள் பிதாவினுடைய இயல்பை நோக்கிப் பணிந்து, "ஐயனே! உமக்குத் திருவுளம் இதுவாயின் பிரமனைச் சிறைநீக்கித் தருவேன்" என்று கூறி, தமது அருகில்நின்றபூதர்களிற் சிலரை நோக்கி, 'நீங்கள் விரைந்து திசைமுகனைச் சிறைநீக்கி, நம் முன் கொண்டுவாருங்கள்" என்று பணித்தருள, அவர்கள்போய் குகைக்குள்ளே விலங்கிடப்பட்டு ஒடுங்கியுறைகின்ற பிரமனைத் தளை நீக்கி அழைத்துக்கொண்டு வந்து, முருகவேள் திருமுன் விடுத்தார்கள். குன்றுதோறாடல்புரியுங் குமரக்கடவுள் பிரமனைக் கையிற் பிடித்து குன்றவில்லியாகிய சிவமூர்த்தியின் திருமுன் விடுத்தார்.



வாணிகேள்வன் மலைமகள் கொழுநரைவணங்கி மெய்யன்புடன் துதித்து, வெள்கிநிற்ப, சிவபெருமான் திருவருள் நோக்கஞ்செய்து 'பங்கயாசன! நீ நெடுங்காலம் சிறையிருந்து இளைத்தனைபோலும்?", என்று திருவாய்மலர்ந்தருளினர். பிரமதேவர், கருணைக்கடலே! தேவரீருடைய திருக்குமாரர் அடியேனுக்குச் செய்த இத்தண்டம் தீதன்று; சிறியேனுக்கு மெய்யுணர்வைத்தந்து, யான் என்னும் அகந்தையை அழித்து, தீவினைகளையெல்லாம் களைந்து, சித்தசுத்தியை விளைத்தது. அடியேன் புனிதனானேன்" என்று விண்ணப்பஞ் செய்தார். அப்பொழுது ஆலமுண்ட அண்ணல் அம்புயனைநோக்கி, "நீ இன்றுதொட்டு உன் படைத்தற்றொழிலை முன்போலவே செய்துகொண்டிருக்கக்கடவாய்" என்று அருளிச்செய்தார்.

அதன்பின் ஐம்முகச்சிவனார் அறுமுகச்சிவனாரை நோக்கித் திருமுறுவல்செய்து திருவருள்சுரந்து, "குழந்தாய்! வருக" என்று திருவாய்மலர்ந்து, குமாரமூர்த்தியைத் தமது திருக்கரத்தினால் எடுத்து, திருத்தொடையின்கண் இருத்திக்கொண்டு, உச்சிமோந்து, தமது தாமரையனைய திருக்கரங்களால் தழுவி, " மைந்த! பிரமனும் அறியாத பிரணவத்தின் பொருள் உனக்கு வருமா? வருமாயின் சொல்வாயாக" என்று மொழிந்தருளினர்.

காமரு தமான் சென்னி கதுமென வுயிர்த்துச் சேக்கர்த்
தாமரை புரையுங் கையாற் றழுவியே யயனுந் தேற்ற
ஓமென வுரைத்துஞ் சொல்லி னுருபொரு ளனைத்தப் போமோ
போமெனி லதனையின்னே புகலென விறைவன் சொற்றன்.

முருகக்கடவுள், முற்றொருங்குணர்ந்த முழுமுதற் கடவுளே! உலகமெல்லாம் பெற்றருளிய அன்னையாகிய எம்பெருமாட்டிக்கு நீர் பிறாரியாவண்ணம் உபதேசித்தருளிய பிரணவத்தின் பொருளை இரகசியமாகவன்றி யாருங்கேட்கச் சொல்வது முறைமையோ? "காலம் இடம் அறிந்து முறைப்படி கேட்கில் யாம் கழறவல்லேல்" என்றனர். எண்டோட் பரமன் திருநகைசெய்து, " மைந்த! உண்மையே யுரைத்தனை" என்று இருக்கைவிட்டெழுந்து, காமலர்குவித்து சிரந்தாழ்ந்து, வாய்பொத்தி செவிசாய்த்து, " உலகங்களுக்கெல்லாம் நாதனே! குமாரக்கடவுளே! என்று பக்தியுடன் துதித்துநின்றார்.

"நாதபோற்றி யென முது தாதைகேட்க அனுபவ
ஞானவார்த்தை யருளிய பெருமாளே"

—திருப்புகழ்.

அவ்வாறு புரமெரித்த புரிசடைக்கடவுள் வழிபாடுசெய்ய, முருகக்கடவுள் தவிசின்கண் வீற்றிருந்து கல்லாலின்கீழ் தென்முகப் பரமாசிரியாக எழுந்தருளி நால்வர்க்கும் மோனநிலையை உபதேசித்த குருநாதருக்கும் குருவாகவிளங்கி குடிலைமந்திரத்தின் பொருளை மழலை மொழியால் தெளிவாக உபதேசித்தருளினர்.

அரவு புனைதரும் புனிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதா வொளிதிகழ்
அறிவை யறிவது பொருளென அருளிய பெருமாளே

அதுகேட்டு ஞானநாயகராகிய சிவபெருமான் திருவுளமகிழ்ந்து எத்தகைப் பெருமிதமுடையோருக்கும் குருநாதன் அவசியம் இருத்தல் வேண்டும் என்பதை உலகிற்கு உணர்த்தி, திருவருள்புரிந்து, குமாரசுவாமியை ஆங்கிருத்தி, இடபமூர்ந்து யாவருந் துதிக்க திருக்கயிலையையடைந்து, மாலயனுதி வானவர்க்கு விடைதந்து திருக்கோயிலினுட்சென்று வீற்றிருந்தருளினர். எந்தை கந்தவேள் கந்தவெற்பில் உறைவாராயினர்.

(தொடரும்)

---

## இரண்டு உபதேச ரத்தினங்கள்.

(1) புண்ணியம், பாவம் என்ற இரண்டில், தான் செய்த புண்ணியத்தை (தருமம் பூஜைமுதலியவற்றை) மறைக்கவேண்டும். மறைத்துவைக்காமல் சொல்லுவதால் அந்தப் புண்ணியம் குறைந்து போகின்றது.

(2) தான் செய்த பாவத்தை மறைத்துவைக்காமல் சொல்ல வேண்டும்; அவ்வாறு சொல்லுவதால் அந்தப்பாவம் தேய்ந்துவிடுகின்றது; இது ஒரு பெரிய தேவரகசியம். தான் செய்த பாவத்தைத் தானே பகிரங்கமாகச் சொல்லுவதால் அப்பாவம் அழிந்துபோகின்றது.

ஆதலால் புண்ணியம் சொல்லுவதால் தேயும்; பாவம் சொல்லுவதால் தேயும்; புண்ணியத்தை மறைத்துவைக்கவேண்டும்; பாவத்தை மறைத்துவைக்கப்படாது.

உ
ஓம் குஹாய நம:

# கற்பு

(21-வது பக்கத் தொடர்ச்சி)

### விசாகையார்.

கங்கையின்மீறிய காவிரிநதி கடலுடன் சேரும் கவின் மிகுமிடத்தில் துறைமுகப்பட்டினமாக விளங்குவது காவிரிப்பூம்பட்டினம் என்பது. கல்வி, செல்வம், வாணிபம், அழகு முதலிய எல்லா நலன்களையும் தன்னகத்தேகொண்டு பொன்னகரேபோல் பொலிவுற்று விளங்குவது அப்பழம்பதி. அத்திருநகரில் தருமதத்தன் என்னும் ஒருவணிகர்பெருமகன் இருந்தான். அவனது தாயுடன் பிறந்த மாமனும் சீருஞ் செல்வமும் உடையோனாய் அந்நகரத்திலேயே வாழ்ந்து வந்தான். தருமதத்தனது தாய்தந்தையர் இளமைப்பருவத்திலேயே மண்ணுலக வாழ்க்கையை விட்டு விண்ணுலகம் புக்கனர். அதனால் தருமதத்தன் தனது மாமன் மனையிலேயே வளர்ந்துவந்தான். மாமனுக்கு வேறு புத்திரரின்மையால் இவன் செல்வமாக வளர்க்கப்பட்டான். அம்மாமன் மகப்பேறு வேண்டி பற்பல தானதருமங்களைப் புரிந்தும், விரதங்களிருந்தும், தெய்வ வழிபாடு செய்தும் தவமிருந்து வந்தான். அவற்றின் பயனாக அவன் வாழ்க்கைத் துணைவி கருவுற்று ஓர் நன்னாளில் பெண்மகவைப் பெற்றெடுத்தனள். அக்குழவி விசாக நட்சத்திரத்திற் பிறந்ததால் அதற்கு விசாகை என்று பெயரிட்டு, மிகவும் அருமையாக வளர்த்துவந்தான். விசாகையும் தருமதத்தனும் ஓரில்லத்திலேயே வளர்ந்து வருவதால் அவர்கள் ஈருடம்புக்கு ஒருயிரென இணைபிரியாது விளையாடி வந்தார்கள். தருமதத்தனை விட்டு விசாகை ஒருநாளும் உணவுகொள்ளமாட்டாள். அவனைவிட்டு ஒருபோதும் விளையாடமாட்டாள். விசாகையிடத்து தருமதத்தனும் அவ்வாறே அன்புடன் இருந்துவந்தான். இருவரும் ஓரே கலாசாலையில் கல்வி பயின்று வந்தார்கள்.

ஆண்டுகள் சில கழிந்தன; தருமன் கட்டழகிற் சிறந்த காளைப் பருவத்தையடைந்தான். விசாகை எழிலுக்கு இருப்பிடமாக இலக்குமியே தாமரையைவிட்டு பூமகள் தவத்தால் வந்ததுபோல் எல்லா நலன்களும் உடையவளாய் நங்கையர் திலகமாய் விளங்கினள். இரு

வரும் மணப்பருவமடைந்தார்கள். அவர்கள் ஒருவரை யொருவர் நேசித்துவந்த அன்பு, காதலாக மாறிற்று. தருமன் மனத்தை விசாகையிடமாகக் கொண்டான். விசாகையின் மனத்திலும் தருமன் நீங்காது நிலவுவானாயினன். அவர்களது தலையன்பைக்கண்ட அந் நகரமக்கள் "தருமதத்தனை விசாகை களவியல் முறையில் கலந்து மணந்து கொண்டாள்" என்று பெரும்பழிமொழி கூறித் தூற்றுவாராயினர். நகரமாந்தர் தன் கற்பின் தூய்மையையுணராது குறைகூறுவதை யறிந்த விசாகை மிகவும் மனம்வருந்தி,

> மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்ன
> நுயிர் நீப்பர் மானம் வரின்

என்ற மொழிப்படி மானம்போனபின் உயிர்வாழ்வதில் யாதுபயன்? என்று நெஞ்சம் புண்பட்டு, தனது ஆபரணங்களைக்களைந்து, அந்நகரத்திலுள்ள பேரம்பலத்தை யடைந்து, அங்கு அமர்ந்திருந்த தெய்வத்தின் முன் சென்று, மும்முறை வலம்வந்து, "தெய்வமே! நீ அறியாத செயல் ஒன்றுளதோ? இல்லையே! ஒருசிறிதும் மாசில்லாத என்மீது இவ்வூரார் கூறும் பழிமொழி உன்காதில் விழவில்லையோ? அதனைக்கேட்டு நீ இவ்வாறு மௌனமாக இருப்பது தருமமா? நின் கருணைக்கு அழகா? உண்மையை உரையாது வாளா இருப்பது தகுமோ? இனி உயிர்வாழேன்" என்று புலம்பி, அத்தெய்வத்தின் முன் விழுந்து தொழுது நின்றாள். இவ்வாறு தன் கோட்டத்துள் வந்து கல்லுமுருகுமாறு கண்ணீருகுத்து வாய்விட்டலறுகின்ற கற்பரசியைக் கண்ட அத்தெய்வம் திருவருள்புரிந்து, அங்கு வழிபாடு செய்துகொண்டு நின்றிருந்த அன்பர்குழாங்கள் அனைவருக்குங் கேட்குமாறு, 'இக்கன்னிகை கற்பிற்சிறந்த காரிகை; இவள் பெய்யென்றால் மழைபெய்யும்' என்று அசரீரியாய் மொழிந்தது. அது கேட்டமக்கள் அனைவரும் மனந்தெளிந்தது. உத்தமியைப் புண்படுத்திய தமது அறியாமைக்கு வருந்தி, விசாகையை வணங்கி, "கற்பிற் சிறந்த காரிகையே! மாசில்லாத நின்மீது பழிகூறி நாங்களே மாசுற்றோம்; நின் மனத்தைப்புண்படுத்தி யாம் புண்பட்டோம். எமது குற்றத்தை மனங்கொள்ளாதொழிக" என்று வேண்டினார்கள். அன்றுமுதல் விசாகையின் மீது அந்நகரத்தில் தோன்றிய பழியகன்றது. விசாகையின்பெருமை குன்றிடை விளக்கேபோல் விளங்கியது.

விசாகை பேரம்பலத்தினின்றும் பெயர்ந்து, தனது மாளிகை சேர்ந்து, தனித்தமர்ந்து, "என்மீது வீண்பழிசுமத்திய இவ்வூரார்கள்



நாணும்படி நான் இப்பிறப்பில் கன்னியாகவே இருந்து தவவொழுக்கத்துடன் காலங்கழித்து, மறுபிறப்பில் தருமதத்தனை மணாளனாகப் பெற்றுமகிழ்வேன்" என்று சபதம்புரிந்து கொண்டாள். பின்னர் தாய்தந்தையரிடம் தன் உறுதியான எண்ணத்தைக் கூறி, அன்றே கன்னிமாடம் புகுந்து கடுந்தவத்தை மேற்கொண்டனள். தழலும் அஞ்சுமாறு தவவொழுக்கத்துடன் இருந்தனள். இதனை அறிந்த தருமதத்தன் மனம்பதைத்து கரைகாணாத் துன்பக்கடலில் மூழ்கி "ஆருயிரிற் சிறந்த ஆரணங்கே! இப்பிறப்பில் நின்னைத்தவிர வேறு ஒரு பெண்ணை நான் விரும்பேன்; நின்னை யிழந்தபின் இந் நகரத்திலுமிருந்து வாழேன்" என்று மதுரையம்பதியைச் சேர்ந்தான். அங்கு வணிகத்தொழிலை மேற்கொண்டு பெரும்பொருளை யீட்டினன். விசாகையை ஒழிய மற்றைய மாதரை மனத்திலுந் தீண்டாதவனாகிய தருமன், அவள் கன்னிமாடத்தில் இருந்து மீண்டு வருங்கால் அவளையே மணப்பதாக எண்ணி மணியை யிழந்த நாகம் போல் இருந்துவந்தான். அறவழியில் நின்று அதிகலாபத்திற்கு ஆசைப்படாமல் வியாபாரம் புரிந்துவந்தானாதலின் செல்வம் மிகவும் பெருகிற்று. அச்செல்வத்தையெல்லாம் தருமதத்தன் திருவாலயத் திருப்பணிக்கும், ஏழைகட்குமாகத் தருமம்புரிந்து வந்தான். செல்வம், சிறப்பு, ஒழுக்கம், பொறை, சீலம் முதலிய எல்லா நற்குணங்களுக்கும் உறைவிடமாக இருந்த அவ்வுத்தமனை மதுரையில் வாழ்ந்த எல்லோரும் நன்கு மதித்து வாயார வாழ்த்தினார்கள். அவனது பெரும்புகழ் மதுரையை அரசாண்டுகொண்டிருந்த மன்னனது செவியை எட்டியது. "அறிவுடை யொருவனை அரசனும் விரும்பும்" என்ற நறுந்தொகைக்கிணங்க மன்னன் தருமதத்தனை வருவித்து உபசரித்து தனது அமைச்சர் தலைவனாக ஆக்கிக்கொண்டான். தருமன் மந்திரக்கிழவனாயிருந்து மன்னனுக்கு உயிரேபோல் பட்டங்கள் பெற்று இனிது வாழ்ந்துகொண்டிருந்தான்.

ஒருநாள் தருமன்பால் ஓர் பெரியவர் வந்தனர். அவரை முறைப்படி தருமன் வணங்கி உபசரித்தான். பெரியார் தருமனை நோக்கி, "அன்பனே! இல்லறத்தைக்காட்டிலும் நல்லறம் வேறுளதோ? இகபரத்திற்கு அருந்துணையாயிருந்து உதவிசெய்பவள் மனைவியேயாம். கற்பின்மிக்க காரிகையுடன் வாழ்வதைக்காட்டிலும் சிறந்த வாழ்வு மூன்று உலகங்களிலுமில்லை; ஆதலால் நீ வறிதே காலங்கழியாது, நின் நகரமெய்தி, நின்மனதிற்கிசைந்த மடமங்கையை மணந்து மகிழ்வாயாக" என்றுகூறி யகன்றனர். தருமன் அப்பெரியார்கூறிய அறவுரையைக்கேட்டு உடன்பட்டு, அரசனிடம் விடைபெற்று, மதுரையைவிட்டுக் காவிரிப்பூம்பட்டினம் வந்துசேர்ந்தான். தன் மனத்தில் இமைப்போதும் நீங்காது உறைந்த காதலியைக் கன்னிமாடத்திற் கண்டான் அப்போது விசாகை இளமைநீங்கி, நரைதிரையுற்று முது

மையுற்று தவவொளியால் காண்போர் கண் கூசும்படி விளங்கினாள். பல ஆண்டுகளாகக் காணாதிருந்த தன் அன்பனைக்கண்ட விசாகை மேகத்தைக்கண்ட மயில்போல் மனமகிழ்ந்து, "ஆர்வல! முன்னாள் நம்மை மயக்கிய மையல் இப்போது எங்குசென்றது? உமக்கும் அறுபது ஆண்டுகள் நிரம்பியது; எனது விரைமலர்க்கூந்தலும் வெண்ணிறத்தையடைந்தது அன்ப! நமது இளமையும் எழிலும் இடையறுக் காத்தலும் இப்போது எங்கு ஒளித்தன?" என்று வினவினாள். தருமதத்தன் விசாகையினது பொருள்செறிந்த பொன்மொழிகளைக்கேட்டு யாதொன்றும் விடைபகராது புன்முறுவல் பூத்திருந்தான். அறுபது ஆண்டுகள் சென்றதும் தருமன் தன்மேல் தலைநாள்கொண்ட காதலில் ஒறணுத்துணையேனும் குறைவுற்றிலன் என்பதையுணர்ந்த விசாகை, "அன்பின்வடிவே! ஆருயிர்த்துணைவ! நான் இப்பிறப்பில் நின் அன்பிற்கு உரியவளாகத்திகழ்ந்து மறுபிறப்பில் நின்னையே மணந்து வாழ்வேன்" என்று உறுதிகூறினாள். அன்னாள்கூறிய சீரிய உரைகளைக்கேட்ட தருமதத்தன் அம்முதுமகளது கருத்திற்கிணங்கி, மென்மேலும் தானதருமஞ்செய்யத் தலைப்பட்டான். பெருந்திருவுடைய அவ்விருவரும் புண்ணிய அறங்கள் எண்ணில் புரிந்தார்கள்.

நாள்பல கழிந்தன; தூய தவநெறியில் நின்ற விசாகை ஒருநாள் அரசவீதியின்வழியே தனியாக ஆலயத்திற்குச் சென்றுகொண்டிருந்தாள். அப்பொழுது அவ்வீதியில்நின்ற அரசிளங்குமரன் அவளைக் கண்டு காதல்கொண்டு, தன்தலையில் அணிந்துகொண்டிருந்த மலர்மாலையை எடுத்து அம்மாதரசின் கழுத்தில் இடக்கருதி, தன்காத்தை உயர்த்தி மாலையைத்தொட்டான் அவள் கற்பின்மாண்பால் உயர்த்திய அவன்கை அப்படியே நின்றுவிட்டது. அரசன்மகன் தன் கையைத் தாழ்த்தப் பலவாறு முயன்றும் பயன்படவில்லை. இன்னணம் இரைமகன் இடர்படும்போது விசாகை இறைவனை நினைந்து வீதியின் வழியே திருக்கோயில் சேர்ந்தாள். அரசிளமைந்தன், அச்சமும் நாணமும் அடைந்து தனது அரண்மனையையடைந்தான் தனது மைந்தனது கையின்கோலத்தைக்கண்ட நீதிதவறாத நிருபன், நடந்ததைக் கேட்டறிந்து, தன் குலக்குமாரன் என்பதுங்கருதாது, தன்குலத்திற்கு ஒருமைந்தனே யுள்ளான் என்பதும் பொருள்படுத்தாது, "நெறிவழுவாத்தே நிருபன்கடமை" யென்று முனிந்து, தனது அழகிய மைந்தனைத் தன்வாளால் வெட்டி வீழ்த்தினான். கற்பின்பெருமையும், இறைவன் அறநெறியின் திறமும் என்னே! என்னே! அத்தகைய புண்ணியசீலர்கள் வாழ்ந்த நந்தமிழ்நாட்டில் கற்பும் சீலமும் தலைசிறந்து விளங்குவதாக.

(தொடரும்)

---

உ

ஓம் குஹாய நம:

# அறம்

(25-வது பக்கத் தொடர்ச்சி)

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை. —முப்பானூல்.

இம்மையிலே புகழ்முதலியவற்றை நல்கி மறுமையிலே தொடர்ந்து இன்பத்தை வழங்குவது அறமொன்றேயாம். "அறஞ்செய்வதின் பலனை ஆராய்ந்து பார்க்கவேண்டா, அறஞ் செய்தவன் சிவிகைமேலூர்ந்து செல்வதையும், அதனைச் செய்யாதவன் அச்சிவிகையைத் தாங்கிக்கொண்டு போவதையும் கண்கூடாகக் கண்டுதெளிக" என்பதே மேற்போந்த திருக்குறளின் கருத்தாகும். அவ்வறமாவது காலத்தாலும், இடத்தாலும், செய்வோனுடைய நல்லெண்ணத்தாலும் மிகுந்தபலனையளிக்கிறது. கோடிக்கணக்கான செம்பொன்னை வழங்கி பெரிய யாகங்களைச் செய்வதைக்காட்டிலும் பசித்துவந்த ஒரு சாதுவுக்கு ஒருபிடி அன்னங்கொடுப்பது சிறந்தது. "தான் சிறிதேயாயினுந் தக்கார்கைப் பட்டக்கால் வான்சிறிதாப் போர்த்துவிடும்" என்பதும் சிந்திக்கத்தக்கதே. ஆதலால் சிறப்பாக இல்வாழ்க்கையை மேற்கொண்டார்கள் ஒவ்வொருவரும் நமது வீடுதேடி வருகின்ற ஏழைகளுக்கும் அடியார்களுக்கும் இயன்ற அளவு தந்து பொன்றுப் புண்ணியத்தைப்பெறவேண்டும். பண்டைக்காலத்தில் நிகழ்ந்ததும், அறத்தின்மாண்பை வலியுறுத்துவதும், நினைக்குந்தோறும் நெஞ்சில் மகிழ்ச்சிவெள்ளத்தை உண்டாக்குவதும், அதியற்புதமுமான ஒரு சரிதத்தை ஈண்டுவரைகுதும்.

## நகுலோபாக்யானம்.

தருமத்தின் வடிவாகவே விளங்கும் யுதிஷ்டிரர் சுயோதனாதிகள் வதத்திற்குப்பின் அத்தினபுரத்தை அரசாண்டுகொண்டிருந்தனர். பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் இவர்களுடன் சேர்ந்து எல்லா அரசர்களையும்வென்று அசுவமேதம் என்னும் ஒரு பெரிய யாகத்தைச் செய்தார். செம்பொன்னை மலைபோல்குவித்து யாதுவர்க்கு வெறுப்புண்டாக்குமாறு தானஞ்செய்தார். நெய், பால், தயிர்

இவைகளின் குளங்கள் அந்த யாகத்தில் உண்பவர்களுக்காகப் பல இருந்தன; தேவர்கள் முனிவர்கள் அரசர்கள் முதலியோர் கூடியிருந்தனர்; முறைப்படி யாகம் முடிவுற்றது; கொடுங்கள்; உண்ணுங்கள்; என்ற ஒலியே கடல்போல் முழங்கிற்று; பெரிய தானமாகிய வெள்ளத்தில் மிதக்கும் அந்த யாகமுடிவில் பாதியுடம்பு பொன்னிறம் பொருந்திய ஒரு கீரி யானது வளையினின்றும் வெளியில் வந்து, இடியிடித்தாப்போன்ற ஒருபெரிய சத்தத்தை உண்டாக்கியது. பார்ப்பதற்கு அழகியதும் பெரியதுமாகிய அந்தக்கீரி, ஒருமுறை அப்படி பயங்கரமாக ஒலித்து விலங்குகளையும் பறவைகளையும் பயப்படும்படி செய்து, "மன்னர்களே! உங்களுடைய பெரிய இந்த யாகமானது குருக்ஷேத்திரத்தில் வசிப்பவரும் உஞ்சவிருத்தி செய்பவருமான ஒரு ஏழை அந்தணர் தானஞ்செய்த ஒருபடி மாவுக்கு நிகராகாது" என்று மனிதன் பேசுவதுபோல் உரக்கச் சொல்லிற்று. அந்தக் கீரியின் வார்த்தையைக்கேட்டு அங்கு கூடியிருந்தோர் யாவரும் மிக்க ஆச்சரியமடைந்தார்கள். பிறகு அங்கிருந்த அறிஞர்கள் அருகில் வந்து கீரியைநோக்கி, "தேவர் முனிவர் அரசர் முதலியோர் சேர்ந்திருக்கும் இந்த யாகத்திற்கு நீ எங்கிருந்து வந்தாய்? நீ என்ன படித்திருக்கின்றாய்? எதை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றாய்? வேதவிதிப்படியும், கோடிக்கணக்கான தானத்துடனும் மந்திர ஆகுதிகளுடனும் செய்த இந்தயாகத்தை நீ எதனால் நிந்திக்கின்றாய்? இந்த யாகத்தில் நால்வகை வருணத்தாற்கும் வெறுப்பின்றி தருமஞ் செய்யப்பட்டது; தேவர்கள் அவிசுகளையுண்டு மகிழ்ந்தார்கள்; சாஸ்திரங்களை ஆராய்ந்து விதிப்படி அறிஞர்களால் இந்தயாகம் நடந்தது; நீ உண்மையைக்கூறு; எதனால் இந்தவார்த்தையைக் கூறினாய்" என்று வினவினார்கள். அந்தக்கீரியானது சிரித்துக்கொண்டு சொல்லத்தொடங்கிற்று. "பெரியோர்களே! நான் சொன்ன இந்த வார்த்தை பொய்யன்று; செருக்கால் சொன்னதுமன்று; உங்கள் இந்த யாகமானது அந்த ஏழைகொடுத்த ஒருபடி மாவுக்குச் சமமாகாது. இதை நான் உங்களுக்கு அவசியம் சொல்லவேண்டியதுதான் குருக்ஷேத்திரத்தில் வசிப்பவரும், தருமத்தில் எண்ணமுடையவரும், * உஞ்சவிருத்தி செய்பவருமான அந்தணர் மனைவியுடனும் மகனுடனும் மருமகளுடனும் சுவர்க்கத்தை அடைந்ததும், நான் நேரில் பார்த்து அனுபவித்ததுமான ஆச்சரியமுடைய உத்தமசரித்திரத்தையும்,

* உஞ்சம்—உதிர்ந்த தானியத்தை ஒவ்வொன்ருகப் பொறுக்குவது.



என்னுடைய இந்த பாதியுடம்பு பொன்னிறமாகச் செய்யப்பட்ட விதத்தையும் நான் உள்ளபடி சொல்லுகிறேன். அமைதியான மனத்துடன் இருந்து கேளுங்கள். அறத்தின் மாண்பையும் அதன் இரகசியத்தையும் உங்களுக்குச் சொல்லப்போகிறேன்.

தருமசீலர்களாற் சூழப்பட்ட குருக்ஷேத்திரத்தில் முற்காலத்தில் ஒரு அந்தணர் *கபோத விருத்தி செய்துகொண்டுவந்தார். பரிசுத்தரும், தருமத்தில் விருப்பமுடையவரும், புலன்களை அடக்கியவருமாகிய அவர், மனைவி மைந்தன் மருமகள் இவர்களுடன் தவஞ்செய்து கொண்டிருந்தார். எப்பொழுதும் அவர் மனைவி முதலியோருடன் ஆருவதுகாலத்தில் (ஒருபகலை எட்டாகப்பிரித்து அவற்றில் ஆருவது காலம், பதினெட்டேமுக்கால் நாழிகைக்குமேல் இருபத்திரண்டரை நாழிகை வரையிலுமுள்ள காலம்) புசிப்பார். சிலநாள் அவருக்கு ஆருவது காலத்திலும் உணவு கிடைக்காது. மறுநாள் ஆருவது காலத்தில் புசிப்பார். கபோத தருமத்தை அனுசரித்த அவர் தெய்வ சிந்தனையுடன் நெறிவழுவாது இருந்துவந்தார், அப்பொழுது கொடிய பஞ்சகாலம்வந்தது. நாளைக்கு வேண்டுமென்று சேமித்துவைக்காத தருமத்தை மேற்கொண்ட அந்த உத்தமருக்கு மிகுந்த சங்கடமுண்டாயிற்று. எங்கும் விளைவின்றி பயிர்கள் தீய்ந்துவிட்டபடியால் இவருக்கு பொருள்கிடைக்கவில்லை, காலஞ்செல்லச்செல்ல அவருக்கு உணவே கிடைக்கவில்லை. அவர் மனைவி முதலியோருடன் அநேகநாள் பட்டினியாகக் கிடந்தார். சுக்லபக்ஷத்தில் சூரியன் உச்சியிலிருந்து வெப்பத்தைக்கொடுக்கும் சமயத்தில் உஞ்சவிருத்திக்காக அந்த வேதியர் மனைவி மகன் மருமகளுடன் புறப்பட்டு அலைந்தார்கள். உணவு கிடைக்கவேயில்லை. தவம்புரிந்தவரும் பசியினாலும் வெயிலினாலும் களைத்தவருமாகிய அவர்கள் மிகவும் தவித்தார்கள். உத்தமர்களான அவர்கள் மறுநாள் ஆருவது காலத்தில் ஒருபடியவதான்யத்தை சம்பாதித்தார்கள். அந்த ஒருபடி யவதான்யத்தை மாவாகச் செய்தார்கள். பிறகு ஜபம் ஓமம் முதலியவைகளை விதிப்படி செய்துவிட்டு அந்த படிமாவை கார்காற்படியாக நால்வரும் பிரித்துக்கொண்டார்கள். பின்பு அவர்கள் மிகவும் பிரியத்துடன் உண்ணப்போகும் சமயத்தில் ஓர் அதிதிப் பிராம்மணர் வந்தார். பசியினால் களைத்திருக்கும் அவர்கள் அதிதியைக்கண்டு மனமகிழ்ந்து, எதிர்சென்று அழைத்து

*ஒன்றென்ருய் விழுந்துகிடக்கும் தானியங்களைப்பொறுக்கி அதனையும் மறுநாளைக்கென்று வைத்துக்கொள்ளாது ஜீவிப்பது.

வந்து இருக்கைநல்கி அர்க்யம், பாத்யம், ஆசமனம் இவைகளைத்தந்து க்ஷேமம் விசாரித்து உபசரித்தார்கள். தூயமனமுள்ளவர்களும், ஐம்பொறிகளை அடக்கினவர்களும், கோபத்தை விலக்கியவர்களும், தருமத்தை அறிந்தவர்களும், சாதுக்களுமாகிய அந்த நால்வர்களும் வந்த அதிதியைவணங்கி உங்கள்வரவு நல்வரவு ஆகுக; நாங்கள் உங்கள் வரவால் புண்ணியசீலர்களானோம் என்று இன்னுரை கூறினார்கள். உஞ்சவிருத்தி வேதியர் தனது பங்காகிய மாவைக்கொண்டுவந்து அதிதிமுன்வைத்து "புசியுங்கள்" என்றனர். அதிதி அந்தக்காற்படி மாவைப் புசித்துத் திருப்தியை யடையவில்லை. உஞ்சவிருத்தி மறையவர் பசி மேலீட்டினால் தான் கொடுத்த மாவையுண்டு திருப்தி யடையாத அதிதியை 'எவ்வாறு திருப்திசெய்து வைப்பது' என்று உணவைப்பற்றி சிந்தித்தார். அவருடைய மனைவியானவள் நாயகனைப்பார்த்து, "என்னுடைய பாகத்தையும் கொடும். இந்த அதிதியுண்டு பசியாறி மகிழட்டும்" என்று சொன்னாள். அந்தணர், பதிவிரதையும், பசியால் களைத்து வாடினவளும், தோலும் எலும்புமாக இருப்பவளும், நடுக்கமுற்றவளும், வயது முதிர்ந்தவளுமான மனைவியைப்பார்த்து, "அன்புடையவளே! புழுக்களும் பறவைகளும் விலங்குகளுங்கூட பத்தினிகளை உணவுதந்து காப்பாற்றுகின்றன. பசியால் மெலிந்துள்ள நீ இவ்வாறு கூறுவது தகுதியன்று; மனைவியால் உணவு கொடுத்து காப்பாற்றப்பட்ட மனிதன் கீர்த்தியை யடையமாட்டான். நல்ல மேலுலகங்களையுமிழந்தவனாவன். அறம் பொருள் இன்பமும், பிதிருகடமையும், குலவிருத்தியும் மனைவியை அடுத்திருக்கின்றன. மனைவியைக் காப்பாற்றுந் திறமையற்று அதற்குவேண்டிய காரியத்தைத் தெரிந்துகொள்ளாத மனிதன் பெரிய இகழ்ச்சியையும் நரகத்தையும் அடைகிறான்" என்று சொன்னார்.

மனைவி, "நாயக! அறமும் பொருளும் நம்மிருவருக்கும் பொதுவானவை, ஆதலால் கருணைசெய்து ஒருபடியில் நான்கிலொருபாகமான என்னுடைய இந்த மாவைப் பெற்றுக்கொள்ளும்; பெண்களுக்கு, சத்தியமும் தருமமும் மோக்ஷமும் ஏனையவிருப்பமும் கணவனையடுத்திருக்கின்றன. பெண்களுக்குக் கணவன்தான் மேலான தெய்வம்; பெண்களுக்கு சுகம் மக்கள் முதலிய பயன்கள் கணவனுடைய அனுக்கிரகத்தால் உண்டாகின்றன; நமது இருக்கைக்குவந்த அதிதியை திருப்திசெய்விப்பது நமது கடமை. எந்த கிருகஸ்த்தன் வீட்டில் ஒரு அதிதிவந்து சந்தோஷத்தையடையாமல் திரும்பிவிடுகி



றானோ அந்த கிருகஸ்த்தன் புண்ணியலோகத்தை யடையமாட்டான் விருந்தை புறத்தில் வைத்துவிட்டு சாவாமருந்தாகிய தேவாமிர்தமேயானாலும் உண்ணப்படாதல்லவா? ஆதலால் இந்த மாவைக்கொடுத்து அதிதியின் பசியைத்தணிவித்து அவருக்கு மகிழ்ச்சியைச் செய்யுங்கள்" என்று இனிமையாகக் கூறினாள். வயது சென்றவரும் பசியால் களைத்தவருமாகிய அந்த அந்தணர் மனைவி தந்த மாவைப் பெற்று அதிதியின் முன்வைத்து "இதையும் உண்ணுங்கள்" என்று இதமாகச் சொன்னார். அந்த அதிதி அந்தமாவையும் புசித்து சந்தோஷமடையவில்லை; இன்னும் வேண்டுமென்ற குறிப்புடன் இருந்தார். அதனைக்கண்ட உஞ்சவிருத்தி மறையவர் மிகவும் மனக்கவலையுள்ளவரானார். பிதாவின் வருத்தத்தைக்கண்ட புத்திரன், தந்தையை வந்தித்து, "அப்பா! நீர் இந்த மாவையும் வாங்கி விருந்தினர்க்குக் கொடும்; இப்படிச்செய்வதுதான் புண்ணியமென்று எண்ணுகிறேன். வயது சென்ற பிதாவைக் காப்பாற்றுவது பெரியோர்க்குச் சம்மதமான காரியம்; ஆகையால் முயற்சிசெய்து எப்பொழுதும் என்னால் நீர் காப்பாற்றத்தக்கவராக இருக்கின்றீர்; முதுமைப்பருவமடைந்த தந்தையைக்காப்பாற்றுவது மைந்தர்களுடைய முக்கியமான கடமை விதிக்கப்பட்டிருக்கிறது; தபோதனரே! இந்தத் தருமமானது மூவுலகங்களிலும் நிலைத்ததாக இருக்கிறது; அதிதியைப் பசியாற்றுவதே சிறந்த தருமம். தாமதமின்றி என்பங்கு மாவையும் இவருக்குக் கொடுத்து உதவுங்கள்" என்றான். பிதா, குழந்தாய்! நீ ஆயிரம் ஆண்டுகள் நிறைந்தவனானாலும் பாலன் என்பதே என்னுடைய எண்ணம்; பிதாவானவன் மைந்தனை உண்டுபண்ணி அந்த மைந்தனால் தான் செய்யவேண்டியதைச் செய்தவனாகின்றான்; வயது முதிர்ந்த நான் உயிர்தரிப்பேன்; மகனே! குழந்தைகளுக்குப் பசி அதிகம்; இதை நான் அறிவேன்; நீ பலமுள்ளவனாக இருக்கவேண்டும்; நான் வயது முதிர்ந்தவனானபடியால் பசியைத்தாங்குவேன்; நீண்டகாலம் பசிதாகத்தைத் தாங்கி தவஞ்செய்திருக்கிறேன்; பசி என்னை வருத்தாது; சிறுபிள்ளையாகிய நீ பசி தாங்கமாட்டாய்" என்றார். புத்திரன், "தந்தையே! நான் உம்முடைய குழந்தையாக இருக்கிறேன்; பிதாவைக் காப்பாற்றுபவனே புத்திரன்; தானே புத்திரனைப் பிறக்கிறான்; ஆகையால் இப்பொழுது நீர் உம்மைக்கொண்டே காப்பாற்றிக்கொள்ளும்; தாமதிக்கவேண்டாம்; அதிதியின் பசியையாற்றும் பொருட்டு இந்த மாவைமட்டுமல்ல, எனது உயிரையும் கொடுக்கின்

றேன்" என்றான். பிதா, புத்திர! நீ உருவத்தாலும் சீலத்தாலும் இந்திரிய அடக்கத்தாலும் எனக்கு சமமாக இருக்கின்றாய்; நான் உன்னைப் பலவிதமாகப் பரிசோதித்தேன்; உன்னுடைய மாவைப் பெற்றுக்கொள்ளுகிறேன்" என்று சொல்லி, சந்தோஷத்துடன் மகனுடைய மாவையும் வாங்கிச் சிரித்துக்கொண்டே அந்த அதிதிக்குக் கொடுத்தார்.

அதிதியாக வந்தவர் அந்த மாவைப் புசித்தும் மகிழ்ச்சியடையவில்லை. தரும சீலராகிய உஞ்சவிருத்தி யந்தணர் நாணத்தையடைந்து அதிதியைத் திருப்திசெய்துவைப்பது எவ்வாறு? என்று நெஞ்சங் கவன்றனர். அருகில் இருந்த பதிவிரதையான மருமகள், அதிதியை திருப்திசெய்ய விரும்பி, சந்தோஷத்துடன் தன்பங்கு மாவையெடுத்துக்கொண்டு வந்து, மாமனாரைப்பணிந்து, "தவசிலாக்கியரே! என்னுடைய இந்த மாவையும் வாங்கி அதிதிக்குக்கொடும்; உம்முடைய மைந்தரிடமிருந்து எனக்கு மைந்தன் தோன்றுவான்; உம்முடைய திருவருளால் எனக்கு அழிவில்லாத பதவிகள் கிடைத்தன; பிதா துன்பமில்லாத இன்ப உலகத்தைப் புத்திரனால் அடைகிறான்; அறம் முதலிய மூன்றும், மூன்று அக்கினிகளும், மூன்று புத்திர பௌத்திர பிற பௌத்திரர்களும், அழிவற்ற சுவர்க்கத்திற்குக் காரணமானவர்கள்; புத்திரன் பிதிர்களின் கடன்களிலிருந்து கரையேற்றுகிறான்; ஆகையால் தாமதமின்றி இந்த மாவையும்கொடுத்து நமது கடமையை நிறைவேற்றுங்கள்" என்றாள். மாமனார், "நல்ல விரதமுள்ளவளே! அம்மா! நான் காற்றினாலும் வெயிலினாலும் தளர்ந்த அவயவங்களுள்ளவளும் நிறம்மாறியவளும் இளைத்தவளுமான உன்னைப் பசியால் கலங்கின மனமுள்ளவளாகக் கண்டும், தருமத்தை அழிப்பவனாகி மாவை எவ்வாறு வாங்கிக்கொள்வேன்? ஆசாரமுள்ளவளே! நீ இவ்விதம் சொல்லுவது நன்றன்று; நீயோ சிறுபெண்; விரதமும் சீலமும் தூய்மையும் தவமுமுடைய உன்னை ஆறாவது காலத்திலும் உணவில்லாதவளாக நான் எவ்வாறு பார்ப்பேன்; பசியால் வருந்தியவளும் இளம்பெண்ணுமாகிய நீ எப்பொழுதும் என்னால் காப்பாற்றத்தக்கவள்; கல்யாணி! அம்மா! நீ பேசுவதற்கும் சக்தியற்றிருக்கிறாயே! பசியால் வாடி வருந்தியுள்ளாய்; உன்னுடைய பரிதாபத்தை நான் கண்டு எவ்வாறு வருந்தாதிருக்கமுடியும்?" என்று சொன்னார். மருமகள், "குணசீலரே! நீர் என்னுடைய குருவுக்குக் குருவும், தெய்வத்திற்குத் தெய்வமுமாயிருப்பதனால், தேவருக்கும் மேலான தேவ



ராக இருக்கின்றீர்; இந்த உடம்பும் உயிரும் தருமமும் குருவின் பணிவிடைக்காக இருக்கின்றன; உம்முடைய அருளால் நல்ல மேலுலகங்கள் கிடைக்கப்போகின்றன; அதிதியைத் திருப்தி செய்விக்கிற விஷயத்தில் பிராணனையும் சமர்ப்பிக்கவேண்டும்; ஆகையால் நீர் இந்த மாவைப் பெற்றுக்கொள்ளும்; என்னைமட்டும் அறவழியினின்றும் ஒதுக்கிவிடவேண்டாம்; மரணபயம் எல்லோருக்கும் உண்டு; ஏழைகளின் பசியை நீக்கினவனை இயமன் பாசக்கயிற்றால் கட்டமாட்டான் என்று தாங்களே சொல்லியிருக்கின்றீர்; அதிதியைச் சந்தோஷப்படுத்துவதைக்காட்டிலும் என்னுயிர் மேலானதல்ல; என்னையும் உய்விக்கவேண்டுமென்ற கருணை என்னிடத்தில் தங்களுக்கிருப்பது நிச்சயமானால் இந்த மாவைப் பெற்றுக்கொள்ளும்; தாமதிக்கவேண்டாம்" என்று பொருளடங்கிய வார்த்தைகளைப் பொன்மாரி போற் பொழிந்தாள். மாமனார், "சுபமானவளே! பதிவிரதையான நீ எப்பொழுதும் இந்தச் சீலத்தாலும் ஒழுக்கத்தாலும் விளங்குகிறாய்; நீ தருமத்துடனும் விரதத்துடனுங் கூடினவளாகிக் குருவின் பணிவிடையைக் கவனிக்கிறாய்; மருமகளே! சிறந்தவளே! ஆகையால் உன்னைத் தருமஞ்செய்பவருள் ஒருத்தியாகக் கணக்கிட்டு மாவைப் பெற்றுக்கொள்ளுகிறேன்; உன்னை வஞ்சிக்கக் கூடாது" என்று சொல்லி, அந்த மாவைப்பெற்று அதிதிக்கு உவப்புடன் கொடுத்தார். இந்த அற்புதமான அறச்செயலைக்கண்ட அதிதி அந்த தருமாத்மாவிடத்தில் சந்தோஷமுள்ளவரானார். பேசுந் திறமுள்ளவரும், மனிதவடிவெடுத்துவந்த தருமமுமாகிய அந்த அதிதி உஞ்சவிருத்தி வேதியரை நோக்கிப் பின்வரும் நல்லுரைகளைக் கூறலானார்.

உத்தம சீலரே! பரிசுத்தமானதும் தருமமாகவும் நியாயமாகவும் சம்பாதிக்கப்பட்டதும் சக்திக்குத்தக்கவாறு கொடுக்கப்பட்டதுமான உம்முடைய தானத்தால் நான் சந்தோஷமடைகிறேன்; ஆ! ஆ!! உம்முடைய தானத்தை விண்ணுலகத்தில் தேவர்கள் உரக்கச் சொல்லிப் புகழ்கின்றனர்; விண்ணிலிருந்து மண்ணில் விழுகின்ற இந்தப்பூமாரியைப்பாரும்; தவமுனிவரே! தேவ இருடிகளும் தேவர்களும் கந்தர்வர்களும், தேவர்களுடைய பரிஜனங்களும் தேவதூதர்களும் பிரம இருடிகளும் பிரமலோகவாசிகளும் விமானத்திலிருந்துகொண்டு, உம்முடைய தானத்தால் வியப்புற்று, துதித்துக்கொண்டு உம்முடைய தெரிசனத்தை விரும்புகிறார்கள்; சுவர்க்கத்திற்குப்போம் நீர் பிரமசரியத்தாலும், சுத்தமான தருமத்தாலும், யாகத்தாலும்,

தவத்தாலும் பிதிர் உலகத்திலிருந்த எல்லாப் பிதுர்களையுங் கரையேற்றிவிட்டீர். அநேக யுகங்களில் வரப்போகின்ற அநேகரும் கரையேற்றப்பட்டார்கள்; ஆகையால் நீர் புண்ணியாத்மா; சுவர்க்கலோகஞ்செல்லும் மிகச்சிறந்தவரே! நீர் மிக்க உறுதியுடன் தவம் புரிகிறீர்; உம்முடைய இச்செயலால் தேவர்கள் அன்புகூர்ந்தார்கள்; நீர் கொடிய பஞ்சகாலத்தில் சுத்தமான சித்தத்துடன் இந்த மாவை முழுவதுங்கொடுத்த இச்செய்கையால் உம்மால் சுவர்க்கஞ் ஜெயிக்கப்பட்டது; பசியானது அறிவைப்போக்கும்; தரும சிந்தையைக் கெடுக்கும்; பசிவந்தால் ஞானமுள்ளவனும் தைரியத்தை இழந்துவிடுவான். எவன் பசியை வெல்லுகிறானோ அவன் நிச்சயமாக சுவர்க்கத்தை வெல்லுவான். எப்பொழுது தானத்தில் விருப்பமுள்ளவனாக இருக்கிறானோ அப்பொழுது தருமம் கெட்டுப்போகிறதில்லை. நீர் மிகக் கொடிய பசியால் களைத்திருந்தும் அதனைப் பொருள்படுத்தாது தருமத்தைச் செய்தீர். நீர் புத்திரனிடத்துள்ள நட்பையும், மனைவியினிடத்துள்ள நட்பையும் பாராமல் தருமத்தையே பெரிதாக எண்ணி ஆசையை விலக்கினீர். மனிதர்களுக்குப் பொருள் கிடைப்பது அரிது; அதிலும் பாத்திரத்தில் தானஞ்செய்வது மிக அரிது; தானத்திலும் காலம் நேர்வது மிக அரிது; அதிலும் சிரத்தையிருப்பது மிக அரிது; பற்றுதலாகிற தாளுள்ளதும், ஆசையாகிற முளையுள்ளதும் விஷயவிருப்பத்தால் மூடப்பட்டதும் மிக சூட்சுமமுமான சுவர்க்கத்தின் வாயில் மனிதர்களால் அஞ்ஞானத்தினால் பார்க்கப்படுகிறதில்லை. அதனை, கோபத்தையும் புலனையும் வென்றவர்களும், தவத்தையுடையவர்களும், சக்திக்குத் தக்கபடி கொடுப்பவர்களுமான மனிதர்கள் பார்க்கின்றனர். ஆயிரங்கொடுக்கச் சக்தியிருக்க, நூறு கொடுப்பவனும்; நூறு கொடுக்கச் சக்தியிருக்கப் பத்துக் கொடுப்பவனும்; சக்திக்குத்தக்கபடி தண்ணீரைக்கொடுப்பவனும் ஆகிய எல்லோரும் சமமான பயனையடைகின்றனர். ரந்திதேவனென்னும் அரசன் ஒன்றுமில்லாதவனாகிச் சுத்தமான சித்தத்துடன் தண்ணீரைக்கொடுத்தான்; அதனால் அவன் சுவர்க்கத்தின் மேற்பாகத்தை யடைந்தான், ஐயா! தருமமானது, நியாயமாக அடையப்பட்டவைகளும், சிரத்தையால் பரிசுத்தமானவைகளுமான சிறியதானங்களால் சந்தோஷப்படுவது போல், பெரியமதிப்புள்ள தானங்களைக் கொடுப்பதால் சந்தோஷப்படுகிறதில்லை. நிருகன் என்னும் மன்னன் ஆயிரம் பசுக்களைத்தானஞ் செய்தான்; அவன் பிறனுடையதான ஒரு பசுவைக்கொடுத்து



நரகத்தையடைந்தான். உசீநரதேசத்தரசனும் நல்லவிரதமுள்ளவனுமான சிபியானவன், தன் உடல் தசையைக் கொடுத்ததால் புண்ணியஞ்செய்தவர்களுக்குரிய உலகங்களை யடைந்து சுவர்க்கத்தில் மகிழ்கிறான். அந்தணரே! மனிதருக்குச் செல்வத்தால் வரும் புண்ணியமும் பலவித யாகங்களால் வரும் புண்ணியமும் நியாயமாகச் சம்பாதித்த பொருள்களால் தம் சக்திக்குத்தக்கபடி தருமஞ்செய்வதால் வரும் புண்ணியத்திற்கு ஈடாகா. மனிதன் கோபத்தால் தானத்தின் பயனை அழிக்கிறான்; லோபத்தால் சுவர்க்கத்தை அடைகிறதில்லை; நியாயமாகப் பிழைப்பவனும் தானத்தை அறிந்தவனுமானவன் தவத்தால் சுவர்க்கத்தை அடைகிறான்; ஒருவன் மிகுதியான தக்ஷிணையுள்ள அநேக இராஜஸூய யாகங்களைச்செய்தாலும், அநேக அசுவமேத யாகங்களைச் செய்தாலும் உமது இந்தப்பயனுக்குச் சமமான பயனை அடைய மாட்டான். ஒருபடி மாவினால் அழிவற்றதான பிரமலோகத்தை வெற்றிபெற்றீர்; சாந்தமான பிரமலோகத்திற்குச் செல்லும். உங்களெல்லோருக்கும் திவ்வியமான விமானம் வந்திருக்கின்றது; இஷ்டப்படி ஏறுங்கள். தபோநிதியே! நான் தருமம், என்னைப் பாரும். நீர் உம்முடைய உடம்பைத் துன்பப்படுத்தி உலகத்தில் பொன்றாத புகழை நாட்டினீர். மனைவியுடனும், மைந்தனுடனும் மருமகளுடனும் சுவர்க்கஞ் செல்லும்” என்று கூறினார். அதிதியாகவந்த தருமம் இவ்வாறு கூறியவுடன், அந்த அந்தணர் மனைவியுடனும் மகனுடனும் மருமகளுடனும் விமானமேறி சுவர்க்கஞ்சென்றார்.

பெரியோர்களே! அந்தப்புண்ணியாத்மா சுற்றத்துடன் சுவர்க்கம் போனவுடன், நான் வளையிலிருந்து வெளிப்பட்டேன். அவர் கொடுத்த இடத்தில் உதிர்ந்திருந்த மாவின்மணத்தாலும், நீரின் ஈரத்தாலும், மலரின் உரைதலாலும், அவர் செய்த தானத்தின் புண்ணியலேசத்தாலும் என்னுடைய தலையானது பொன்மயமாகியது, அந்த ஏழை செய்த தானமாவுபட்ட இந்தப்பாதி உடம்பும் பொன்மயமாகியது. மிக்க விசாலமான இதைப்பாருங்கள். அறிவுடையவர்களே! மற்றொரு பாதியுடம்பும் இவ்விதமாக எப்படியாகும் என்று நான் அடிக்கடி சந்தோஷத்துடன் தவவனங்களிலும் யாகங்களிலும் சஞ்சரிக்கிறேன். அறிவின் மிக்கவரும் கௌரவ சிரேட்டருமாகிய யுதிஷ்டிரருடைய இந்த யாகத்தைக் கேள்விப்பட்டு நான் பெரிய ஆசையுடன் வந்தேன். இங்குவந்தும் என் பாதியுடம்பு பொன்மய

மாகவில்லை. ஆகையினாலேதான், நான் நகைத்து, "இந்தயாகமானது ஒருபடி மாவுக்கு எவ்விதத்திலும் சமமாகாது" என்ற இந்த வாக்கியத்தைச்சொன்னேன், நான் அப்பொழுது ஒருபடிமாவின் தூளிகளால் பொன்மயமாகச் செய்யப்பட்டேன். ஆகையால் இந்தப் பெரிய யாகமானது அந்தத்தூளிகளுக்கு ஒப்பாகாது என்று என்னால் கருதப்பட்டது" என்று அந்தக்கீரி யாகத்திலிருக்கும் எல்லோரையும் நோக்கி இவ்வாறு சொல்லிவிட்டு அவர்கள் கண்ணுக்குப்புலப்படாமல் சென்றது.

ஆதலால் எத்துணைக் கொடிய வறுமையிருப்பினும் தத்தம் தகுதிக்குத்தக்கவாறு ஒல்லும் வகையால், கரவாது அறத்தைச் செய்ய வேண்டும்.

"நோயிற் பிளவளவேனும் பகிர்மின்கள்."

(தொடரும்)

---

## வினா விடை மணிகள்.

(ஆதிசங்கரர்)

கிம் ஸோச்யம் கார்பண்யம் ஸதிவிபவே கிம் ப்ரஸஸ்த
மௌதார்யம் ।
க: பூஜ்ய: வித்வத்பி: ஸ்வபாவத: ஸர்வதா விநீதோய: ॥

கே:—பரிதாபப்படத்தக்கது எது ?

ப:— கார்ப்பண்ணியம் (கருமித்தனம் தனக்குமில்லாமல் பிறருக்குமில்லாமல், இகத்துக்கு மில்லாமல் பரத்துக்கு மில்லாமல் நிரம்ப வைத்துக்கொண்டிருத்தல்).

கே:—சௌகரியங்களிருப்பின் எது பிரஸ்த்தம் ? (புகழப்படுவது).

ப:—ஔதார்யம். (வரையாது கொடுத்தல்).

கே:—அறிவுடையோர் யாரை பூஜிப்பர் ?

ப:— இயல்பாகவே எப்பொழுதும் வணக்கமுள்ளோரை.
(காரியத்தை உத்தேசித்து வினயத்துடன் இருப்பது சுவபாவ வினயமாகாது)

காரியத்தை உத்தேசித்து வினயத்துடன் இருப்பவன் ஏற்ற மரத்துக்கு சமானமாகும்.

சால் நிரம்பினவுடன் ஏற்ற மரத்தின் தலை ஆகாயத்திலிருக்கும். சால் வடிந்ததும் தலை குனிந்துவிடும்.

அப்படியே காரியத்தை யுத்தேசித்து வினயத்துடன் இருப்பவன் ஜீவனங் கிடைக்காதபோது தலையைத் தொங்கப்போடுவன். ஜீவனம் கிடைத்துவிடின் தலை விரைத்துக்கொள்ளும்.

# திருப்புகழமிர்தம் திருக்கணித பஞ்சாங்கம்.

வெகுதான்யஹு வைகாசிமீ—கலி 5040, சாலிவாகனம் 1861, பசலி 1347,
கொல்லம்ஹு 1113, ஹிஜிரி 1357, இங்கிலீஷ் 1938ஹு வசந்தருது.

| மே-ஜூன் | வைகாசி. | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | நேத்திரம். | ஜீவன். | விரதாதிகள். |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | மணி. நி. | மணி. நி. | நா. | | | |
| 14 | 1 | சனி | பவு 2-9 ப | வி 8-42இ | சி 60 | 2 | 1 | ரிஷபரவி நா. 18-38 |
| 15 | 2 | ஞா | பி 3-58 ,, | அனு 11-9,, | ம 60 | 2 | 1 | |
| 16 | 3 | திங் | து 6-6 ,, | கே 1-55 ,, | சி 60 | 2 | 1 | குளம் கிணறுவெட்ட |
| 17 | 4 | செ | திரி 8-30 இ | மூ 4-54 ,, | அ57-48சி | 2 | 1 | வியாதியஸ்தர் குளிக்க |
| 18 | 5 | புத | சது10-58 ,, | பூரா ... ,, | அ 60 | 2 | 1 | திருதினஸ்பிருக் |
| 19 | 6 | வி | பஞ் 1-23 ,, | பூரா7-56 ப | சி 60 | 2 | 1 | முகூர்த்தம் |
| 20 | 7 | வெ | சஷ் 3-36 ,, | உத் 10-51,, | சி12-43ம | 2 | 0 | கரிநாள் |
| 21 | 8 | சனி | சப் 5-23 ,, | திரு 1-29,, | சி 60 | 2 | ½ | யாத்திரை செய்ய |
| 22 | 9 | ஞா | அ ...... ,, | அவி 3-39,, | ம 24 43சி | 1 | ½ | திருதினஸ்பிருக் |
| 23 | 10 | திங் | அ 6-35 கா | சத 5-11 ,, | சி 28-35ம | 1 | ½ | மருந்துண்ண |
| 24 | 11 | செ | நவ 7-5 ப | பூர 6-3மா | ம30-45அ | 1 | ½ | சேக்கிழார் உற்சவ ஆர |
| 25 | 12 | புத | த 6-51 கா | உத் 6-8 ,, | சி30-53 ம | 1 | ½ | சர்வமுகூர்த்தம் |
| | | | ஏகா 5-49இ | | | | | |
| 26 | 13 | வி | துவா4-3 ,, | ரே 5-29 ப | சி29-20அ | 1 | ½ | ஏகா ,, சிசுபமுகூர்த்தம் |
| 27 | 14 | வெ | திர 1-39 ,, | அசு4-10 ,, | அ26-3 சி | 0 | ½ | பிரதோஷம் வித்யார |
| 28 | 15 | சனி | ச 10-44 ,, | பர 2-16,, | சி21-18அ | 0 | ½ | கிருத்திகை |
| 29 | 16 | ஞா | அ ●7-30 ,, | *கி 11-57,, | சி 60 | 0 | 0 | அமாவாசை கரிநாள் |
| 30 | 17 | திங் | பி 3-59 ப | ரோ9-21 ,, | அ60 | 0 | 0 | |
| 31 | 18 | செ | து 12-27 ,, | மி 6-37 ,, | | | | |
| | | | | தி 3-56 இ | சி 2-10 ம | 0 | 0 | |
| 1 | 19 | புத | திரி 8-57 ப | | | | | |
| | | | சது 5-42 இ | புன 1-27 ,, | சி 60 | 0 | ½ | |
| 2 | 20 | வி | பஞ் 2-53 ,, | பூச11-21,, | அ 44-0சி | 1 | ½ | |
| 3 | 21 | வெ | சஷ் 12-33,, | ஆயி 9-42 ,, | ம 60 | 1 | ½ | |
| 4 | 22 | சனி | சப் 10-45 ,, | மக 8-39 ,, | அ37-15சி | 1 | ½ | |
| 5 | 23 | ஞா | அஷ் 9-37 ,, | பூர 8-13 ,, | சி36 10அ | 1 | ½ | |
| 6 | 24 | திங் | நவ 9-8 ,, | உத் 8-25 ,, | சி 60 | 2 | ½ | |
| 7 | 25 | செ | தச 9-16 ,, | அ 9-15 ,, | சி 60 | 2 | ½ | |
| 8 | 26 | புத | ஏ 10-1 ,, | சி 10-39 ,, | சி 60 | 2 | 0 | |
| 9 | 27 | வி | து 11-17 ,, | சுவா 12-33,, | அ 47-0சி | 2 | 1 | |
| 10 | 28 | வெ | திர 12-59 ,, | வி 2-52 ,, | சி 60 | 2 | 1 | |
| 11 | 29 | சனி | ச 3-2 ,, | அனு5-32 ,, | சி 60 | 2 | 1 | (ஜயந்தி |
| 12 | 30 | ஞா | பவு○5-17 ,, | கே ... | ம 6. | 2 | 1 | ஸ்ரீ அருணகிரிநாதர் |
| 13 | 31 | திங் | பி ... ,, | கே 8-24ப | சி 60 | 2 | 1 | |
| 14 | 32 | செ | பி 7-43 ப | மூ 11-25 ,, | அ14-8 | 2 | 1 | ஸ்ரீ சம்பந்தர் நக்ஷத்திர |

| | | | |
|---|---|---|---|
| சனி | பு | கேகு சுசெ | |
| கு | | 5 மிசுக் 14 மிசெ 21 ரிபு 30 கசுக் | |
| | ரா | | |

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்

## ஆயுள் சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| மகா கோடையாளர் | ... | ரூபாய் 50 |
| உயர் கோடையாளர் | ... | ,, 25 |
| கோடையாளர் | ... | ,, 12 |

மகா கோடையாளர் :

(1) திரு. N. இராஜா பிள்ளை அவர்கள், R. M. S. ஹெட் சார்டர், புதுதெரு சந்து, தெப்பக்குளம், P. O. திருச்சி.

(2) ஆ. பி. பொன்னுசாமிப்பிள்ளை அவர்கள், மரம், ஓடு, வியாபாரம், திருச்சி.

உயர் கோடையாளர்கள்.

(1) திரு. T. S. நடேசம் பிள்ளை, காஷியர், S. I. R, திருச்சி.
(2) திரு. V. சிவகுரு முதலியார் அவர்கள், சென்னை.
(3) திரு. A. சாம்பசிவ நாயகர் அவர்கள், சூளை, சென்னை.
(4) திருப்புகழன்பர் V. R. நாகப்ப நாயகர் அவர்கள், சென்னை.
(5) திரு. ப.ராம. சுப. சுப்பிரமணிய செட்டியார், தென்னூர்.
(6) திருவாளர் சா. ப. சாமிக்கண்ணுப்பிள்ளை அவர்கள், உறையூர்.
(7) திரு. துரைசாமி நாடார், கண்ருக்டர், நாச்சிகுறிச்சி.

கோடையாளர்கள் :

(1) திரு N.சிங்காரம் பிள்ளை, ஹெட்கிளார்க், ஆடிடர்ஆபீஸ், திருச்சி
(2) திரு. K. வெங்கடாஜலம் செட்டியார், ஸ்ரீபாலசுப்ரமண்ய ஸ்வாமிகோவில் தர்மகர்த்தா, சின்னசெட்டி தெரு, உறையூர்.
(3) S. மாணிக்கம்பிள்ளை, ஆயுர்வேதபாஸ்கரர், உறையூர்.
(4) குமாரபிள்ளை டிரான்ஸ்போர்ட் கம்பெனி, பாலக்கரை, திருச்சி.
(5) T. N. நாகரத்தினம் பிள்ளை, 30, புதுதெருசந்து, திருச்சி.
(6) A.ஷண்முகம்பிள்ளை, ஆனரரிமேஜிஸ்திரேட், திருவானைக்கோயில்.
(7) திரு. M. S. பூரணலிங்கம் பிள்ளை, கோயம்புத்தூர்.
(8) திரு. தே. பா அ. அருணைசலம் அவர்கள், துறையூர்.
(9) அடியார்க்குடிமை C. S. தாமோதர முதலியார், சென்னை.
(10) திருவாளர் தா. மா. பொன்னுசாமி ஆச்சாரியார், சூளை.
(11) திரு. K. பழநிவேலு ஆச்சாரியார், திருச்சி.
(12) திரு. சு.மாணிக்கஞ் செட்டியார், சின்னகம்மாளத்தெரு, திருச்சி.

இப்புது வருடத்தில் ஆயுள் சந்தாதாரராகச் சேர்ந்த அன்பர்களுக்கு மிகுத்த கனமதறு நீள் சவுக்ய சகல செல்வயோக மிக்க பெருவாழ்வும், தகைமை சிவஞானமும் உண்டாக இளம்பூரணனது இணையடி மலரை இறைஞ்சுகிறோம்.

புராணேதிகாச பாரங்கதர்,

காங்கேயநல்லூர், மல்லையதாஸ் பாகவதர்,

" திருப்புகழமிர்தம் ஆபீஸ் " தலைவர்.

Printed at the Central Co-operative Printing Works, Ltd., Madras
and Edited & Published by Kangayanallur Krupanandawari Avl.,
108, Swami Naicken St., Chintadripet, Madras.

